கலைவாணர்

# என். எஸ். கே.



கவிஞர் - சுப்பு ஆறுமுகம்

ஸ்ரீமகள் கம்பெனி
122, வரதாமுத்தியப்பன் தெரு
சென்னை-1

வெளியீடு: 209
முதற் பதிப்பு நவ. '57




விலை 75 ந. பைசா



எமது கிளை நிலையங்கள்:

150, நேதாஜி ரோடு,
மதுரை.

*

14, சின்னக்கடைத் தெரு,
திருச்சி

*

102x, மதுரை ரோடு,
திருநெல்வேலிச் சந்திப்பு.

*

15/402, வெரைட்டி ஹால் ரோடு,
கோயமுத்தூர்.

*

72, சாந்தினி சவுக் ரோடு,
பெங்களூர்-1

*

எம். எஸ். ராஜு கம்பெனி,
286, சைனா பஜார்,
சென்னை-1

# காணிக்கை

கலைவாணரைப் பெற்றெடுத்து உலகிற்குத் தந்த, அவருடைய தாயார் இசக்கியம்மாளுக்கு இந்நூலைப் பணிவுடன் காணிக்கையாக்குகிறேன்.

- சுப்பு ஆறுமுகம்

# பதிப்புரை

இந்நூலைக் கலைவாணரின் வாழ்க்கை வரலாற்று நூல் என்பதை விட, கலைவாணரின் புகழ்பாடும் உரை நடைக் கவிதை நூல் என்னலே பொருத்தமுடைத்து. தென்றல் நடை போலும் சொல்லோட்டத்தில் செந்தமிழ்க் கலைஞனின் வாழ்வுச் சிறப்புச் செய்யப்பட்டுள்ளது. அம்மேதையை, மனிதனைகவும், சீர்திருத்தச் செம்மலாக வும், கவிஞனைகவும், கல்லூரியாகவும் ஆக்கிப் புகழ்மாலை தொடுக்கப்பட் டிருக்கிறது.

அறிஞர் அண்ணு கூறியதுபோலத் தமிழகத்தின் புதியதொரு சகாப்த மாகத்தொடங்கி முடிந்த மாமேதைக்கு, அன்னார் நடந்து சென்ற அடிச்சுவட் டுக்குச் சூட்டப்படும் மலர் இந்நூல் என்ருலும் சாலப் பொருந்தும்.

''இவன் மற்றவரைப்போல் பிறந்து, வாழ்ந்து, முடிந்துவிட்டுப் போக வில்லை. இன்னும் வாழ்ந்துகொண்டே யிருக்கிருன்''.

பதிப்பாளர்..




# பொருளடக்கம்









'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

**27-1-1979**




# கலைவாணர்—ஒரு மனிதர்

உலகிலே தினமும் எத்தனையோ பேர் பிறக்கிறார்கள்; எத்தனையோ பேர் இறக்கிறார்கள். எனினும் ஒரு சிலர்தான் இறந்தும் இறவாதவர்களாக என்றும் புகழுடன் காலத்தையே வென்று நிற்கிறார்கள். அத்தகைய சிறப்புக்குரியவர்களிலே, அண்மையில் காலமான நமது நகைச்சுவை மன்னன் கலைவாணர் கிருஷ்ணன் அவர்களும் ஒருவர்.

கலைவாணர் ஒரு மனிதர் என்றால் மற்றவர்கள் மனிதர் இல்லையா—என்று கேட்கத் தைரியம் இல்லாவிட்டாலும், அநேகர் நினைக்கலாம். அதனால்தான் இந்த தலைப்பில் எழுத நேரிட்டது.

மனிதனாகப் பிறப்பது அரிதல்ல; பிறந்த பிறகு மனிதனாக வாழ்வதுதான் அரிது - என்பது கலைவாணரின் சித்தாந்தம், இந்தச் செயற்கரிய காரியத்தை அவர் சர்வ சாதாரணமாகச் செய்துவிட்டு சாகாப் புகழுடன் உலக அரங்கிலே உலவுகிறார்.

தென் பாண்டி நாட்டைச் சேர்ந்த நாகர்கோவிலை அடுத்திருக்கும் ஒழுகினசேரியிலே வாழ்ந்த சுடலை ஆண்டியா பிள்ளை-இசக்கியம்மாள் என்ற நல்ல தம்பதிகளுக்கு 29-11-1908-ல் ஒரு கலைக் குழந்தை பிறந்தது. வசதியினாலே அந்தக் குழந்தை வளர்ந்தது என்று சொல்வதைவிட வறுமையினாலே வளர்ந்தது என்பதே பொருந்தும்.

குழந்தை சிறுவனானான்.

சுடலை ஆண்டியா பிள்ளையிடம் எத்தகைய இரக்க குணம் இருந்ததோ, அதே குணம் அந்தச் சிறுவனிடமும் இருந்தது. அந்

தச் சிறுவனுக்கு பெற்றோர்கள் கொடுத்த செல்வம் அந்த கொடைக் குணம் ஒன்றுதான்.

வீட்டில் தின்பண்டம் வாங்கிய உடன் எல்லாப் பிள்ளைகளும் தோட்டம், கோவில், ஓடைப் பக்கம் சென்று ஒளித்து வைத்து தாங்கள் மட்டும்தான் தின்று மகிழ்வதுண்டு. அந்தச் சிறுவனோ தனக்குத் தின்பண்டம் வீட்டில் கொடுக்கப்பட்டதும், ஊர் பிள்ளைகளையெல்லாம் கூட்டிக் கொண்டு வந்து ஆடிப் பாடி விளையாடி அந்தப் பண்டத்தை எல்லாருக்கும் பகிர்ந்து கொடுத்துத் தானும் உண்ணுவான்.

பசிக்கின்ற நேரத்தில் கையில் இருக்கும் சில்லறையைக் கொடுத்து இரண்டு பழங்கள் வாங்கித் தின்னப் போவான். அப்பொழுது, பசிக்கிறது என்று ஒருவன் வந்து கேட்டால் அவனிடம் ஒன்றைக் கொடுத்து விடுவான். மீதமாயிருக்கும் ஒன்றைத் தான் தின்னப் போவான். அப்பொழுதும் இன்னொருவன் வந்து கேட்டால் அதையும் கொடுத்துவிட்டு நேராக ஓடை சென்று கைநிறைய தண்ணீரை அள்ளிக் குடித்துவிட்டு, ஏதோ நாடகப் பாட்டுக்களை முணங்கிப் பாடி ஆடிக் கொண்டே மனம் போன திசைகளில் நடந்து கொண்டிருப்பான். தனக்குப் போகத் தானம் என்பார்கள்; அந்தச் சிறுவனோ தானத்துக்குப் போகத்தான் தனக்கு என்று, பழமொழியை புதுமொழியாக்கி வாழ்ந்தான்.

நேரு, ராஜா, சர்களைப் போல பசியைப் பட்டினியை இன்னலை ஏக்கத்தை நாடகத்தில்தான், கதையில்தான் அவன் கண்டறிய வேண்டும் என்பதல்ல; இயற்கையிலேயே அத்தனையும் அவனைத் தேடி வந்து கொண்டிருந்தன. அந்தக் காரணத்தாலும், பரம்பரைக் குடும்பச் சிறப்பாலும் அவனிடம் துளிர்த்த பொது நோக்கமும் கொடைக் குணமும், அவன் ஜெனரல் ஆஸ்பத்திரியில் 30-8-57-ல் உயிர் துறந்தானே அந்நாள் வரை நிலவி வந்தன.

அன்று......?

சிறுவன் நாடகத்தின் விளம்பரத் தாள்களைக் காணுவான்; நாடகக் கொட்டகையைச் சுற்றிச்சுற்றி வருவான். நாடகத்தைப் பற்றி எவரேனும் பேசிக் கொண்டிருந்தால் ஒட்டி நின்று கேட்பான். இதற்கெல்லாம் என்ன காரணம்?

நாடகக் கொட்டகைக்குள்ளே போய் நாடகம் பார்க்க ஆசை. நாடகத்திலே ஆடிப் பாடும் அருமைக் கலைஞர்களுடன் தானும் சேர்ந்து வாழ வேண்டும் என்று ஆசை. தானும் ஒரு பெரிய கலைஞனாக வரவேண்டுமென்று ஆசை. தூய ஆசைதான். எனினும் துட்டு இல்லா விட்டால் என்ன பண்ண முடியும்?

சோடா வியாபாரத்தைத் துவக்கினான். வெளியிலேயே சுற்றி விற்றுக் கொண்டிருந்தான். அதில் கிடைக்கும் லாபம், நாடகத்திற்கு இவன் அனுமதிச் சீட்டு வாங்கிப் போகும் அளவுக்கு அவ்வளவு அதிகமாக இல்லை. சிந்தித்தான். இரண்டு கைகளிலும் தன்னால் முடிந்த வரையில் எத்தனை சோடாப் புட்டிகளை எடுத்துக் கொள்ள முடியுமோ அத்தனை புட்டிகளை எடுத்துக்கொண்டு 'சோடாக்கலர் சோடாக்கலர்' என்று கூவிக்கொண்டே கொட்டகைக்குள் புகுந்தான்.

சோடாப் புட்டிகளுடன் நாடகக் கொட்டகைக்குள் புகுந்த அதே சிறுவன்தான், பிற்காலத்தில் புகழுக்கு மேல் புகழையும், பொருளுக்கு மேல் பொருளையும், பொன்னுடைகளுக்கு மேல் பொன்னுடையும் கண்ட மனிதர் கலைவாணர் கிருஷ்ணன்.

ஒருவன் எத்தகைய ஏழ்மை நிலையில் இருக்கக் கூடாதோ அத்தகைய ஏழ்மை நிலையில் இருந்து, எத்தகைய இமாலயப் புகழ்நிலையைக் காண்பது அரிதோ, அத்தகைய இமாலயப் புகழ் நிலையைக் கண்டு, வாழ்வின் இரு துருவங்களையும் தொட்டவன் எவனோ அவன்தான் மனிதன் என்னும் புகழுக்குரியவன். வெறும் நூறு பவுண்டுக்கு மேற்பட்ட சதையையும் ஐந்தடிக்கு மேற்பட்ட உயரத்தையும் மட்டுமே பெற்றிருப்போர் மனிதர்கள் ஆகார்!

கலைவாணரிடம் இன்று உலகம் கண்டிருக்கும் சிறப்புக்கள் அத்தனையும் அவரிடம் இடைவழியில் வந்ததல்ல; பிறர் கொடுத்து வந்ததல்ல; கருவிலே அமைந்த திரு; பிறப்பிலே வந்த சிறப்பு; இயல்பிலேயே வந்த ஏற்றம்; கலைவாணர் கிருஷ்ண னுக்கு அன்றே மற்றவர்களைச் சந்தேகப்படத் தெரியாது. உள் ளொன்று வைத்துப் புறமொன்று பேசத் தெரியாது. ''தூய உள் ளம், அன்புள்ளம், பெரிய உள்ளம் தொல்லுலக மக்கள் எல் லாம் ஒன்றே என்னும் தாயுள்ளம்''-என்ற பாரதி தாசன் பாட லில் காணும் தாயுள்ளத்தைப் பெற்ற தமிழ்ப் பெரியார் கலை வாணர் கிருஷ்ணன்.

1925-ம் ஆண்டு அவரது கலைப் பயணம் துவங்கியது. முயற்சியில் அபார நம்பிக்கை கொண்ட அவர் சிபார்சுத் தேவதை களின் கடைக்கண் அருள் இன்றியே மதுரை ஸ்ரீ பால சண்முகா னந்த நாடக சபாவில் சேர்ந்தார். அந்த நாடக சபாவின் உரிமை யாளர் டி. கே. எஸ். சகோதரர்களின் சிற்றப்பா திரு. செல்லம் பிள்ளை அவர்கள். அந்தச் செல்லம் பிள்ளையைப்பற்றி கலை வாணர் அடிக்கடி நினைத்து அன்பொழுகப் பேசி நன்றி சொல் வதை நான் பன்முறை கேட்டிருக்கிறேன். என்றோ கிடைத்த ஒரு உதவிக்கு எத்தனையோ ஆண்டுகள் கழித்தும் நன்றி சொல்லும் பண்பை கலைவாணர் ஒருவரிடம்தான் காணலாம், தீட்டிய மரத் தில் கூர்மை பார்க்கும் இந்த யுகத்திலே!

முதன் முதலில் இரண்டாவது ராஜபார்ட் வேஷத்தைக் கொடுத்தார்கள். கொஞ்ச நாள் கழித்து அவர்களே நகைச்சுவைப் பாகத்தைக் கொடுத்தார்கள்; அப்போது பெரிய நகைச்சுவை நடிக ராக விளங்கிய எம். ஆர். சாமிநாதன் அவர்கள், கம்பெனியை விட்டு விலகவே அவர் நடித்த நகைச்சுவை பாகம் கலைவாணர் கிருஷ்ணனுக்குக் கிடைத்தது. அப்போதே கிருஷ்ணன் தாம் அணிய வேண்டிய வேஷங்களுக்குரிய உடைகளில், முடியில் அக்கறை செலுத்துவார். தானே வசனம், பாடல்களை எழுதிப் பழகுவார். இப்படியே தூங்கும் நேரம் போக பாக்கியுள்ள நேர

மெல்லாம் கலையைப்பற்றியே எண்ணிய கிருஷ்ணன், ரசிகர்களின் மனதிலே குடியேற ஆரம்பித்தார். அவருக்குச் சம்பளம் உயர்ந்தது. செல்வாக்கு உயர்ந்தது. ஆனால் கைவசம் பணநிலை மட்டும் உயரவில்லை. பத்து ரூபாய் சம்பளம் வாங்கிய நாளிலேயே இருபது ரூபாய்க்கு மேல் பிறருக்காகக் கொடுத்தார். ஐம்பது ரூபாய் சம்பளம் வாங்கும் போதே நூறு ரூபாய்க்குமேல், கஷ்டப்படும் அன்பர்களுக்காகக் கொடுத்துவிடுவார். அவர் கம்பெனியில் சேர்ந்த நாள் முதல் கம்பெனியின் கணக்குப் புத்தகத்தில் அவர் பெயர் அதிகப் பற்று வரிசையில்தான் இருக்கும். அதேபோல கடைசியிலும், இந்த உலகத்தில், அவர் பெயரிலே சுமார் நாலு லட்சம் ரூபாய் வரை அதிகப்பற்று இருந்தது. கிருஷ்ணனைப் பொறுத்தவரையில் வரவுக்கும் பற்றுக்கும் ஒரே மதிப்புக் கொடுக்கும் ஒருவித விசித்திரமான உள்ளம் படைத்தவர். இன்னொருவர் பணத்தையும் இன்னொருவர் பணம் என்று நினைக்க மாட்டார். தன் பணத்தையும் தன் பணம் என்று நினைக்கத் தெரியாது. அவருடன் ஸ்டுடியோவுக்கு காரில் போய்க்கொண்டிருக்கும்போது கோடம்பாக்கம் ரயில்வே கேட் சிலசமயம் அடைத்திருக்கும். திறக்கும்வரை கார் நிற்கும். அந்த ஓரிரு நிமிடங்களுக்குள், காரைச்சுற்றிக் கூட்டம் வந்துவிடும். இரண்டு மூன்று நாட்களாகச் சாப்பிட்டறியாத பிச்சைக்காரர்களும் இவரைக் கண்டதும் சிரிப்புடன் காருக்குள் எட்டிப் பார்ப்பார்கள். அவர்களுக்கு ஏதாவது ரூபாய் தமது சட்டைப் பையிலிருந்து எடுத்துக் கொடுப்பார். எதிர்பாராத விதமாகத் தமது பையில் பணம் இல்லாவிட்டால் காரில் தன்னுடன் இருக்கும் என்னைப்போன்றவர்களிடமாவது டிரைவரிடமாவது இருக்கும் சில்லறை முழுவதையும் வாங்கிக் கொடுத்துவிடுவார். டிரைவருக்கோ எனக்கோ அதைக் கணக்குவைத்து திரும்பத்தர மறந்துவிடுவார். இதிலிருந்துகூட கலைவாணரின் ''கணக்கை விரும்பாத மனநிலை''யைப் புரிந்து கொள்ளலாம்.

நேற்றைய நிகழ்ச்சிகளே இன்று அவருக்குப் பழமையாகிவிடும். அன்றாடம் புதிது தேடி அலையும் அற்புதமான ஒரு உள்

ளம் அது. அப்படிப்பட்டவர் ஒரே நாடக சபாவில் இருப்பாரா என்ன! உலகில் எல்லோருமே தன்னைப்போல சரி சரி என்று அனுசரித்துப்போவார்கள் என்று கருதிய கலைவாணர் இன்னொரு கம்பெனிக்குப் போய்விட்டார். விளைவென்ன?

பொய்க்குற்றம் சாட்டப்பட்டார். போலீஸில் பிடிபட்டார்.

கிருஷ்ணன் தங்கச் சங்கிலியைத் திருடினாராம். எப்படிப் பாருங்கள். பொருள்களின்மீதே பற்றுதல் இல்லாத ஒருவரின் மேல் பொருளைத் திருடியதாகப் புகார். கிருஷ்ணனின்மேல் பிற் காலத்தில், லக்ஷ்மிகாந்தம் கொலைவழக்கில் ஒரு பொய்க் குற்றம் சாட்டுவதற்காக, இந்த உலகம் அன்றே அப்படி ஒரு திருட்டுக் குற்றத்தைச் சாட்டி ஒரு ஒத்திகை பார்த்துக்கொண்டதோ என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது. "99 கைதி களை விடுதலை செய்வதுகூடப் பாவம் அல்ல. ஒரு நிரபராதி யைத் தண்டிப்பதே பாவம்" என்றொரு பொன்மொழி உண்டு. இந்தப் பாவத்தைச் செய்த பயனாக தமிழ் நாடு சுமார் இரண்டரை ஆண்டு கலைவாணரின் கலைப்படைப்புகளைப்பெற முடியாமல் தண்டனையும் பெற்றது.

நாடக உலகிலே நாளுக்கு நாள் முன்னேறிவந்த கிருஷ்ணன் 1934-ல் பேசும்பட உலகில் புகுந்தார். அவர் முதன் முதலாக நடித்தபடம் 'சதி லீலாவதி'தான் என்றாலும் "மேனகா"வே முத லில் வெளிவந்தது. அன்று அந்தப் படங்களில் நடிக்கும்போது எத்தனை ஆர்வம் காட்டினாரோ அதே ஆர்வத்தை அவர் கடைசி யாக நடித்த "யார் பையன்" "தேசிங்கு ராஜன்" போன்ற படங் களிலும் காட்டினார். ஆஸ்பத்திரியில் மரணப் படுக்கையில் இருக் கும்போதுகூட அவர் உள்ளம் தொழிலையே நினைத்துக்கொண் டிருந்தது. உதாரணமாக ஒருநிகழ்ச்சி. இயற்கைவைத்தியத்துக்காக ஆஸ்பத்திரி சமவெளியில் ஒரு நாள் வெயிலில் உட்கார வைத் தார்கள். அந்த அரைமணி நேரம்கூட அவரால் சும்மா உட்கார முடியவில்லை. "அடடா இப்படி சும்மா இருப்பதைவிட மேக் அப் போட்டுக்கொண்டு ஏதாவது ஒரு படத்துக்கு அவுட்டோருக்குப்

போயிருக்கலாமே. படத்துக்குப் படமும் ஆச்சு வைத்தியத்துக்கு வைத்தியமும் ஆச்சு'' என்று கூறினர். கலைவாணர் காலனின் அருகில் நின்றுகொண்டிருந்த போதிலும் அவரது உள்ளம் உழைப்பின் பக்கமே நின்றுகொண்டிருந்ததை எண்ணும்போது மெய் சிலிர்க்கிறது.

கலைவாணருக்கு மிகவும் பிடிக்காதது சோம்பல் ஒன்றுதான். சில நேரங்களில் கால்மேல் கால்போட்டு உட்கார்ந்து கொண்டு வெற்றிலை போடுவார். அவர் சும்மா இருப்பது போன்றுதான் தோன்றும். உண்மையில் அப்படியல்ல. அவர் மூளை எதையாவது சிந்தித்துக் கொண்டிருக்கும். மனிதன் உழைப்பினுல் உயர முடியுமா முடியாதா என்ற கேள்விக்கு விடைதெரியாமல் யாரேனும் குழம்பிக்கொண்டிருந்தால், அவர்களை அப்படியே கூட்டி வந்து எவரும் உயர முடியாத நிலைக்கு உழைப்பினுல் உயர்ந்த என். எஸ். கிருஷ்ணனின் படத்தைக் காட்டிவிடலாம். ஒரே கவனத்துடனும் விடாமுயற்சியுடனும் எவன் எந்தத் தொழிலையும் எடுத்துக் கொண்டாலும் சரி, அவன் அதில் நிச்சயமாக மன்னனுக வந்துவிட முடியும் என்ற பொன்மொழியை வெற்றிலை போட்டுக் குதப்பியவாறே வெற்றிச் சிரிப்புடன் சொல்லும் கலைவாணரை இனி நாம் என்று காணப்போகிருேம்?

அவரிடம் யாராவது வந்து அதிர்ஷ்டத்தால் முன்னுக்கு வந்துவிட்டீர்கள் என்ருல் அவர் சற்று வாடிவிடுவார். ''என்னடா இது வேடிக்கை. அல்லும் பகலும் சிந்தித்து சிந்தித்து நான் முன்னுக்கு வந்திருக்கிறேன். அதிர்ஷ்டம் என்ற இல்லாத ஒன்றுக்கு நமது புகழைப் பிடுங்கிக் கொடுக்கிருரே'' என்று தமது வாட்டத்தின் காரணத்தை, அவர் போனதும் சொல்லிச் சொல்லிச் சிரிப்பார்.

உழைப்பினுல் மட்டுமே முன்னுக்குவந்த கலைவாணர் உழைப்பவர்களைத்தான் மதிப்பார். கம்பெனியில் நன்ருக உழைக்கும் ஆபீஸ் பையனைப்பற்றிக்கூட மணிக்கணக்கில் பாராட்டிப் பேசுவார், கேட்டிருக்கிறேன். அதே கலைவாணர், உழைக்காமலும்

மற்றவர்களைப் பற்றிக் குற்றம் சொல்லிக் கொண்டும், ''கேரம் போடு'' ''பிங்பாங்'' போன்ற விளையாட்டுகளை விளையாடிக்கொண் டும் கள்ள உடல் வளர்க்கும் நபர்களைப்பற்றியும் மிகவும் பரிதா பப்படுவார்.

யாரிடமும் அவருக்குப் பகைமை கிடையாது. யாரையாவது எப்போதாவது பிடிக்காவிட்டால் ஏதாவது சொல்லிவிட்டு அடுத்த மணிநேரமே அவரைக் கூப்பிட்டு உறவுடன் பேசிக் கொண்டிருப்பார். நாம் ஏதாவது சொன்னால் அவன் ஏதாவது நினைப்பானோ என்று அவர் நினைப்பதில்லை. என்னமோ எல் லோரிடமும் அவருக்கே புரியாத ஒருவித உரிமையுடன் பழகி வந்தார் கடைசி வரையில்!

உழைப்புக்கு சிறப்புக்கொடுத்து உயர்ந்துவிட்ட இவ்வளவு பெரிய மனிதரிடம் இன்னும் பல அரிய குணங்களைக் கண்டிருக் கிறேன்.

நாம் பெரியவன், நம் மகிழ்ச்சிக்காகச் சுற்றியிருக்கும் மற்ற வர்கள் பேசவேண்டும் என்று அவர் நினைப்பதில்லை. சுற்றியிருக் கும் மற்றவரின் மனமறிந்து அவர்களின் மகிழ்ச்சிக்காகவே இவர் பேசிக்கொண்டிருப்பார். மற்றோரின் மகிழ்வில் தனது மகிழ் வைக் காணும் தன்மையை அவரது வாழ்வின் எந்த ஒரு நாளி லும் காணலாம். இதைச் சரியாகப் புரிந்து கொள்ளாத அநேகர் ''அண்ணனுக்கு என் மேல்தான் அன்பு. மற்றவர்களிடம் அவர் அன்பு வைக்கவில்லை'' என்று மார்தட்டிப் பேசுவது பேதமை. அண்ணன் அப்படியெல்லாம் இல்லை. அவருக்கு எல்லோரிடமும் ஒருவிதமான அன்புதான். குற்றாலத்து யானையிடம் எவ்வளவு அன்போ அதே அன்புதான், சென்னையில் அவர் வீட்டில் வளர்ந்த நாய்க்குட்டியிடமும் வைத்திருந்தார். பெற்றெடுத்த பிள்ளைகளிடம் வைத்திருந்த பாசம்தான் அவருக்குக் கலையுலகப் பிள்ளைகளிடமும் இருந்தது. பல மாதம் கழித்து நாகர்கோவிலி லிருந்து பெற்றெடுத்த தாயார் வந்திருப்பார்கள். அவர்களிடம் எவ்வளவு பாசமாகப் பேசுவாரோ அவ்வளவு பாசத்துடன்தான்

டாகடர் தருமாம்பாளிடமும் ராமாமிருதத்தம்மையாரிடமும் பேசு வார். தாய்க்குக்கூடத் தனியன்பு காட்டியறியாதவர் அவர். எல்லா உயிர்களிடமும் ஏகமன நிலையில் பழகியவர். இது காந்தீ யக் கண்கொண்டு நிதானமாகப் பார்ப்பவர்களுக்குத்தான் புலனு கும்.

காக்காயையும் குருவியையும் தன் சாதி என்றார்; நீள் கடலை யும் மலையையும் தன் கூட்டமென்றார்—பாரதியார். தமிழ் வர லாற்றிலேயே பாரதிக்குப்பிறகு, அந்தப் பெரிய மனம் கலை வாணர் ஒருவரிடம்தான் இருந்தது. பாரதியைப்போல் பேசுபவர் கள் பலர் இருக்கலாம். பாரதியைப்போல் வாழ்ந்தவர் கலை வாணர் ஒருவர்தான். இதைப்பற்றி எவரிடமும் விவாதித்து என் னால் வெற்றிபெற முடியும் என்று என்னுடைய நேர்மையுள்ளம் என்னுள் கூறிக்கொண்டிருக்கிறது. தன்னிடம் இப்படியொரு மகாப் பெருமை இருக்கிறது என்ற ரகசியம் கலைவாணருக்குத் தெரிந்து இருந்ததா, தெரியவில்லையா என்பதை மட்டும், என் னால் இந்த பத்தாண்டுத் தொடர்பிலும் கண்டுபிடிக்க முடிய வில்லை.

பெருந்தன்மையின் உருவமாகவே வாழ்ந்த கலைவாணரின் பெருமை அவரிடம் பயன் கருதாமல் நெருங்கிப் பழகிய ஒரு சில நேர்மையாளருக்கு மட்டுந்தான் புரியும்; அந்தச் சந்தன மரத்தின் காற்றே போதும் என்றிருந்தவர்கள் சிலர்; சின்னஞ் சிறு கிளைகளை மட்டும் வெட்டி அரைத்துப் பூசிக் கொண்டவர்கள் சிலர்; விறகாக்கி எரித்து வெந்நீர் போட்டுக் குளித்து இன்று தலை துவற்றிக் கொண்டிருப்பவர்களும் சிலர்; இந்த மூன்று தினுசான ஆள் களிடம் கூட கலைவாணர் பேதா பேதம் காட்டவில்லை. அவருக் குத் தராதரமும் தெரியும். என்ன செய்வது? பகைவனுக்கருளும் பாரதி வழி வந்தவர் ஆயிற்றே!

காவியக்கண் கொண்டு பார்க்கும்போது. இயற்கைத் தாய், 'என். எஸ். கிருஷ்ணன்' என்ற ஒரு கனவைக் கண்டு கொண்

டிருந்தாள், அது 49 வது வருடத்தில் பாதியில் கலைந்து விட்டது. எழுந்து கண்ணைத் துடைத்துக் கொண்டிருக்கிறாள் என்றுதான் எனக்குச் சொல்லத் தோன்றுகிறது. என். எஸ். கேயின் வாழ்க்கை 'கமா' என்னும் அடையாளத்தில் தான் முடிந்து விட்டதே தவிர (Fullstop) முற்றுப்புள்ளி என்ற நிலைக்கு வந்து தானாக முடிவடையவில்லை. வெறும் கார்ட்டூன் எனப்படும் கேலிச் சித்திர நிலையிலேயே அந்த 'அஜந்தா ஓவியம்' அழிந்து விட்டது. ஒரு பெரியவர் சொன்னார், இந்த ஐம்பது வருட வாழ்க்கையில் என். எஸ். கிருஷ்ணன் ஐநூறு வருட வாழ்க்கை வாழ்ந்து விட்டார் என்று. அது கிருஷ்ணனைப்பற்றி சரியாக அறியாமல் சொன்ன வார்த்தை. அவர் நாட்டுக்குச் செய்தவைகளை விட செய்ய நினைத்திருந்தது அதிகம். வாழ்ந்த காலத்தைவிட இன்னும் வாழ நினைத்த காலம் அதிகம். என்ன செய்வது! கலைவாணர் இறந்ததைவிட தஞ்சைக் கோபுரம் இடிந்திருக்கலாம். குற்றாலம் சுடுகாடு ஆகியிருக்கலாம். சென்னைக் கடல் பொங்கி எழுந்திருக்கலாம். அதையாவது மக்கள் பொறுத்திருப்பார்கள். கலைவாணரின் பிரிவைப் பொறுக்க முடியாமல் கலங்கி நிற்கிறார்கள்!

எல்லோருக்கும் ஓரிடத்தில் மட்டும்தான் இதயம் இருக்கும் என்று சொல்கிறார்கள். கலைவாணருக்கு மட்டும் கடவுள் அங்கமெல்லாம் இதயத்தை வைத்திருந்தாரோ என்றுதான் நினைக்கத் தோன்றுகிறது. அப்படிப்பட்டவர் அவர். இந்தியாவிலே இரக்கத்திற்கு முதல் பரிசு என்று வைத்தால் அதுவும் கலைவாணருக்குத்தான் கிடைக்கும். அதையும் பரிசு கிடைக்காமல் அழுது கொண்டிருப்பவன் ஒரு கொடியவனாயினும் அவனுக்கு இரக்கப் பட்டுக் கொடுத்து விடுவார்.

ஒரு சம்பவம் நினைத்தாலே கலைவாணரைக் கையெடுத்து வணங்கத்தான் தோன்றுகிறது. சின்ன வயதிலே அவர் இருந்த நாடகக் கம்பெனி ஒன்று திருநெல்வேலியில் நடந்து கொண்டிருந்தது. காலையில் எழுந்த கிருஷ்ணன் தாம்பிரவருணி ஆற்

றுக்குத் தனியாகக் குளிக்கப் போய்க் கொண்டிருந்தார். ரயில் இருப்புப்பாதை பக்கமாகப்போவது ஆற்றுக்கு சுருக்குவழி. அப் படிப் போய்க் கொண்டிருந்தார். அப்போது வேகமாகப் போய்க் கொண்டிருந்த ரயில், தண்டவாளங்களுக்கு இடையே நின்ற ஒரு கழுதையைத் தூக்கி பலத்த காயங்களுடன் வயல் பக்கம் வீசி எறிந்துவிட்டு ஓடியது. கழுதை விழுந்த இடத்தில் கழுதையைச் சுற்றிலும் ரத்தவெள்ளம். கத்தியது—இறந்து விட்டது. அந்தப் பக்கமாகப் போய்க் கொண்டிருந்த கிருஷ்ணன் அந்தக் கழுதை யின் பிணத்தைப் பார்த்துப் பார்த்து அழுதார். அது ரயிலில் அடி பட்டிருக்கும் போது எத்தனை வேதனைப் பட்டிருக்குமோ அந்த வேதனைக்கு இவர் ஆளாகி விட்டார்.

இப்படிப்பட்ட கலைவாணர் மனிதரா? அல்லது.........? அரியலூர் விபத்தைக் காலைத் தினசரியில் படித்து விட்டு ''நல்ல வேளை நான் ரயிலில் போவதாயிருந்தேன். கடவுள் என்னைக் காப்பாற்றி விட்டார்'' என்று சொல்லியவாறே ஓவலைக் குடித்து விட்டு, உற்சாகமாகப் பாடிக்கொண்டு, ஸ்டுடியோ நிலைக் கண்ணாடி முன் அமர்ந்து மேக்அப் போட்டுக் கொண்டிருக்கிறார் களே, கலைஞர்கள், இவர்கள் மனிதர்களா?

மனிதன் என்ற சொல்லுக்கே மதிப்பு ஏற்படுத்தி விட்ட கலைவாணரைப்பற்றி நேர்மையான இலக்கிய மேதைகள் ஒரு காவியம் எழுதினால் அது நிச்சயமாக கீதை, சத்திய சோதனை, திருக்குறள் பக்கத்தில் வந்து நிற்கும் என்பது என் நம்பிக்கை.

கலைவாணரின் சிந்தை எங்கெங்கெல்லாமோ ஓடியது. எதையெல்லாமோ விரும்பியது. எனினும் அன்பு என்ற ஒரு இடத்தில் அடிமையாகக் கிடந்தது.

ராமமூர்த்தி, ஜீவானந்தத்தை நினைத்தால் ஏழைகளைப் பற்றிப் பேசுவார். காந்தி மகானை நினைத்தால் அவருக்குப் பேச்சே வராது; கண்ணீர்தான் சொட்டும். அண்ணாவைப்பற்றி நினைத் தால் தமிழைப்பற்றிப் பேசுவார். பாட்டு என்ற பேச்சு ஆரம்பித்

தாலே பாரதியார் கவிமணியைப்பற்றி பேச ஆரம்பிப்பார். பெங்களூர் போகும் போது சித்தூர் எல்லைப் பக்கம் கார் போய் விட்டால் போதும். காரிலிருந்தவாறே மா. பொ. சி. யைப்பற்றி பேச ஆரம்பித்து விடுவார். சினிமாக் கவிதைகளைப் பற்றிப் பேசும் போது அவர் நாராயண கவியைப் பாராட்டாத நாளே கிடையாது. தீவிரமான சாமர்த்தியத்தைப்பற்றிப் பேசும்போது கருணாநிதியைப்பற்றிப் பேச ஆரம்பிப்பார். பாசத்தை நினைத்தால் நம்ம கண்ணதாசன் என்று பேச ஆரம்பித்து விடுவார். நேர் மையையும் ஒழுக்கத்தையும்பற்றிப் பேச்சு வந்து விட்டால் நெடுஞ்செழியனைப் பற்றிப் பேசுவார். துணிவைப்பற்றிப் பேசிய வாறே ''அதோ அவரைப் பாருங்கள்'' என்று ஒரு படத்தைக் காட்டுவார். அது பெரியார் படமாக இருக்கும். ராஜாஜி பேச் சைப் பத்திரிகையில் படித்துவிட்டு பேஷ் பேஷ் என்பார். அதே சுருதியில்தான் காமராஜின் பேச்சுக்கும் பேஷ் போடுவார். திடீ ரென ''இதென்னது ரெம்ப நல்ல மனுஷன் இப்படிப்போய் ஒதுங்கி விட்டாரே'' என்பார். அது யார் என்றால் ஓமந்தூர் ரெட்டியார் என்பார்.

இந்த நேரத்தில் சமையல்காரன் இலையைப் போட்டு பரிமாற ஆரம்பிப்பான அவனைப்பற்றிப் பாராட்ட ஆரம்பித்து விடுவார். ''இந்த சமையல்காரரை உங்களுக்குத் தெரியுமோ, முன்னே ஒருதரம் நாகர்கோவில் வீட்டில் ஆர். கே. சண்முகம் செட்டி யாருக்கு விருந்து வைத்தேன். இவரோட சமையலை ஆர். கே. எஸ். ரெம்ப ரெம்பப் பாராட்டினார்.'' என்று பக்கத்தில் இருப்ப வர்களிடம் மிகவும் சுவாரஸ்யமாகப் பேசுவார்.

சாப்பிட்டு முடிந்ததும் வெற்றிலை பாக்குத் தட்டைக் கொண்டு பையன் வைப்பான். ''இவன் ரெம்பக் கெட்டிக்காரன். ஒருதடவை இவனை அடுத்த அறைக்கு ஒரு வேலையாய்ப் போகச் சொல்லிவிட்டு வேண்டுமென்றே இரண்டு வெற்றிலையை எடுத்து தரையில் வீசியிருந்தேன். இவன் வந்ததும் என்ன செய் கிறான் என்பதைப் பார்க்க ஆவலாயிருந்தேன். பிறகு இவன் வந்

தான். வந்ததும் கீழே கிடந்த வெற்றிலையை எடுத்து தட்டில் வைத்தான். எப்படிப் பார்த்தீர்களா. தனது வேலையை எவ்வளவு அக்கறையுடன் செய்கிறான். இவனல்லவா முன்னுக்கு வரு வான்'' என்பார்.

கொஞ்ச நேரம் கழித்து நாய்க் குட்டி வந்து அவர் மடியில் விளையாடும். ''இந்த நாய்க்குட்டியைப் பற்றித் தெரியுமோ. என்னை விடவே விடாது. நான் பத்து நாளைக்கு அயலூர் போயிட்டு வந்தால், என்கிட்ட வந்து முகத்தை வைத்து தடவி, மோதி என்னை ஏன் விட்டுட்டுப் போயிட்டே என்று கேட்கிற மாதிரி விளையாடும்'' என்று பாராட்டுவார்.

கலைவாணர் வெற்றிலை போட்டுக் கொண்டிருக்கும்போது ஒரு வெற்றிலைக்கு ஒருவர் வீதம் பாராட்டிக் கொண்டே யிருப் பார் என்று கூடச் சொல்லலாம். அப்படி அவர் மனம் மற்றவர் களின் மகிழ்ச்சியையே விரும்பிக்கொண் டிருந்தது.

சில சமயங்களில் பெரிய பெரிய ஆட்களுடன் இருந்து பேசிக்கொண் டிருப்பார். அவரது கண்முன் கஷ்டப்படும் யாரா வது ஒருவன் தென்பட்டு விட்டால் போதும். உடனே நோக்க மறிந்து எழுந்து வந்து பையில் இருக்கும் பணத்தை அப்படியே எடுத்துக் கொடுத்துவிட்டு வந்து விடுவார். இன்று நவீனமாக நன்கொடை கொடுப்பவர்களைப்போல, நன்றிக்காக அவன் பக்கம் காத்து நிற்கவும் மாட்டார். மறுநாள் தினசரிப் பத்திரிகைகளில் தன் பெயரைத் தேடவும் மாட்டார்.

வீட்டில் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது வாசலில் பிச்சைக்காரன் ''அம்மா பசிக்குது'' என்று கூவினால், இன் றுள்ள எந்தத் தலைவர்களுக்கும் முகத்திலோ அகத்திலோ எந்த விதச் சலனமும் ஏற்படுவது இல்லை. கலைவாணர் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது இப்படியொரு குரல் கேட்டாலோ, முத லில், அவனுக்கு ஏற்பாடு செய்துவிட்டுத்தான் அடுத்த கவளம் இவர் உண்பார். குற்றாலத்தில் ஒரு சம்பவம். சாப்பிட்டுக்

கொண்டிருக்கும்போது பிச்சைக் குரலைக் கேட்டு இவரே எழுந்து வெளியே போய் பிச்சைக்காரனைக் கூட்டி வந்து தன்பக்கம் வைத்துச் சாப்பாடு போட்டார். அந்தப் பந்தியில் ஒருவனாக இருந்து நான் இந்தக்காட்சியை நேரிலேயே கண்டிருக்கிறேன்.

மனத்துறையிலும் தொழில் துறையிலும் இவரைப்போல வேறு யாருமே கிடையாது என்று துணிவுடன் கூறலாம்.

நாகர்கோவிலிலே டென்னிஸ் கிளப்பில் பந்து எடுத்துப்போடும் பையனாக மூன்று ரூபாய் சம்பளத்துக்கு வேலை பார்த்த கலைவாணர், தன்னைப் பல லட்சங்கள் தேடிவரும் வண்ணம் நடந்து கொண்டார். அப்படி வந்ததையும் இல்லார்க்கெல்லாம் அள்ளி அள்ளிக் கொடுத்து இன்பம் கண்டார்.

எல்லோரும் சம்பாதித்த பணத்தை பூமிக்குள் புதைத்துத் தான் வைப்பார்கள். இவரோ பூமியிலிருந்து ஐம்பது அடி உயரத்தில் ஒரு காந்தி ஸ்தூபியைக் கட்டினார்.

இதனால்தான் கலைவாணர் ஒரு மனிதர் என்கிறேன். இன்று நாட்டில் பெரியவர்கள் என்று உலவும் யாரிடமாவது இத்தகைய சிறப்புக்கள் இருக்கின்றனவா? இருந்தால் அவர்களையும் மனிதர் என்கிறேன். மதிக்கிறேன். கலைவாணருடன் நிறுத்திக் கையெடுத்து வணங்குகிறேன். காவியமும் பாடுகிறேன்.

எங்கே தேடிப்பிடியுங்கள் பார்க்கலாம்? பத்தாண்டு அவகாசமும் தருகிறேன்.

# கலைவாணர்—ஒரு நகைச்சுவைப் பிறவி

கலைவாணருக்குப் பொன்னுடை போர்த்திய விழாவிலே சொல்லின் செல்வர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் ''இதோ நம்மிடையே வீற்றிருக்கிறார் நகைச்சுவை மன்னன். மன்னன் நின்றால் சிரிப்பு, அசைந்தால் சிரிப்பு, பேசினால் சிரிப்பு, பாடினால் சிரிப்பு, ஆடினால் சிரிப்பு. அவரது ஒ வ் வொ ரு அங்க அசைவிலும் நகைச்சுவையின் உட்பொருள் தங்கிக் கிடந்து தண் மணம் வீசுகிறது. மன்னனைப் பாருங்கள். தானாகவே நமக்குச் சிரிப்பு வருகிறது'' என்று பேசினார். அப்போது மக்களும் கைதட்டிக் களித்தார்கள். கலைவாணரும் சிரித்தார். மயிலை ரசிக ரஞ்சனி சபாவே சிரித்தது. சேதுவும் சிரித்தார்.

மைசூர் பிருந்தாவனம், காஷ்மீர் இயற்கைக் காட்சிகள் இவைகளைக் கண்டால் தானாக ஒரு மகிழ்ச்சி பிறக்கிறதே அதே மகிழ்ச்சி கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனைப் பார்க்கும் போதும் நமக்கு ஏற்படுகிறது. இவ்விரண்டையும் ஒப்புநோக்கும் போதுதான் கலைவாணர் ஒரு நகைச்சுவைப் பிறவி என்று உறுதி செய்கிறேன். அவர் நிற்பதும் நடப்பதும் பேசுவதும் பாடுவதும் ஏதோ நம்மை யறியாமல் நம் இதய நரம்பைத் தொட்டு இனிய நாதத்தை உண்டாக்கி விடுகிறது. என். எஸ். கிருஷ்ணனைப் படைத்ததன் மூலமாக இயற்கையின் பெருமை இன்னும் கொஞ்சம் உயர்ந்து விட்டது என்றாலும் அது மிகையுரை யல்ல. இப்படி நான் சொல்வது கூட அவருக்குப் பிடிக்காது. நான் முயற்சியால்தான் முன்னுக்கு வந்தேன். இயற்கை கியற்கை அது இது எல்லாம் இல்லை என்றுதான் பதில் சொல்வார். இப்படி அவர் பேசுவதற்குக் காரணம் இயற்கையின்மையல் அவர்



கொண்டுள்ள வெறுப்பு அல்ல. முயற்சியிடம் அவர் கொண் டிருந்த அளவற்ற நம்பிக்கை. இந்த நகைச்சுவைப் பிறவி எத்த னையோ துயரங்களைத் தன் வாழ்வில் கண்டது. எனினும், இடுக் கண் வருங்கால் நகுக என்ற குறளுக்கு இலக்கணமாக வாழ்ந்து வந்தது.

அரசியலில் புகும் சிலர் இரண்டு வார சிறைத் தண்டனை பெற்று சிறைக்குள் போய் மூன்ருவது நாளே, சே, இது என்ன வாழ்க்கை என்று சலித்ததை நான் கேட்டிருக்கிறேன். உலகில் பொல்லாத வழக்கு, இல்லாத பழி அவர் மேல் சூழ்ந்தது. சுமார் இரண்டரை ஆண்டு சிறைவாசம் பெற்ருர். அப்பொழுதும் அவர் தன் நகைச்சுவை மனத்தால் உலகத்தை நோக்கி நகைத்துக் கொண்டுதான் இருந்தார். சிறையின் உள்ளே தன்னைப் பார்க்க வந்தவர்களை அவர்தான் தேற்றினுரே தவிர அவரை யாரும் தேற்ற வேண்டிய அவசியம் வரவில்லை. கூண்டுக்குள் கிளியைப் பிடித்து அடைத்துப் போட்டு அழகு பார்ப்பது போல் எங்களையும் பிடித்து உள்ளே போட்டிருக்கிருர்கள் என்றுதான் அவர் நகைச் சுவையாகச் சொன்னுரே தவிர 'ஏ சதிகார உலகமே' என்று கண்டனக் கணைகளைத் தொடுத்துவிட வில்லை. நான் நிரபராதி யானுல் நிச்சயம் விடுதலை பெறுவேன் என்ருர் விடுதலையும் கண் டார்.

அவரது வாழ்வின் பிற்பகுதியில் கடைசி இரண்டு மூன்று ஆண்டுகளாக அவர் அடிக்கடி டாக்டரைச் சந்திக்க நேரிட்டது. அப்பொழுதும் அவர் தன் உடலையும் உலகத்தையும் ஒரு நகைச்சுவைப் பொருளாகத்தான் கருதினுர். ஐயோ என்ன செய்வேன் என்று தலையில் கைவைத்து உட்கார்ந்து விடவில்லை. இயற்கை தனக்குத் தந்திருக்கும் உடம்பையே, தான் வேஷம் போடும்போது அணிந்திருக்கும் ஒரு உடை போலத்தான், சர்வ சாதாரணமாகத்தான் மதித்தார்.

ஓராண்டுக்கு முன்பு உடல்நலமின்றிப் படுத்திருந்த அவரை நோக்கி டாக்டர் ''உங்களுக்கு எக்ஸ்ரே எடுக்க வேண்டு'' மென்று சொன்னுர்.

''வேண்டாமுங்க. உங்களுக்கு எந்தப் பாகத்தைப் பற்றி விபரம் தெரியணும். ஏங்கிட்ட கேளுங்க. எது எவ்வளவு பெரிசா இருக்கு. எது எவ்வளவு சிறுசா இருக்குண்ணு நானே கண்டு பிடிச்சு சொல்றேன்''என்று சிரித்துக் கொண்டே சொன்ஞர். டாக்டருக்கு ஒரே சிரிப்பு.

கொஞ்ச நேரம் கழித்து அவரைப் பார்க்க வந்த ஒருவர் ''அண்ணனுக்கு இப்ப வயசு என்ன ஆச்சு''என்று கேட்டார். உடனே இவர் ''எனக்கா, நாற்பது வயதாகி ஏழு வருஷமாச்சு. ஆனல் நாற்பது போதும் அதிக ஆசை எதற்கு என்று அதோடு ஸ்டாப் பண்ணிக் கொண்டேன்''என்ருர். கேட்டவருக்கு சிரிப்புத் தாங்க முடிய வில்லே. உடனே மறுபடியும் கலேவாணர் சிரித்துக் கொண்டே ''நாற்பத்தேழு வயது என்ருல் கிழவன் மாதிரித் தெரியுது பாருங்க அதனுலேதான் அப்படிச் சொன்னேன்''என்று கூறினர். வந்திருந்தவர் விழுந்து விழுந்து சிரித்தார். கடைசிக் காலத்தில் ஜெனரல் ஆஸ்பத்திரியில் டாக்டர்கள் அவருக்கு ஊசி மேல் ஊசி போட்டார்கள். உடனே டாக்டர்களே நோக்கி சிரித்துக் கொண்டே ''என் உடலில் செருப்புத் தைக்கிறீர்களா'' என்று கேட்டார். டாக்டர்களுக்கே சிரிப்புத் தாங்க முடியவில்லே.

மருந்துகளே எந்த நோயாளியுமே இதுவரை காயகல்ப மாத்திரைகளேப் போல மதித்து மிகவும் பணிவுடன் வாயில் போடுவதைத் தான் பார்த்திருக்கிறேன். அவர்களுக்குத் தங்கள் உயிரில் அவ்வளவு அக்கறை. கலேவாணரோ, மருந்துகளே பிள்ளேகள் பப்ரமெண்டுகளேத் தின்னுமே அந்த உணர்ச்சியுடன் தான் தின்னுவார். சூழ்ந்திருப்பவர்களின் மனம் குழம்பாமலிருக்க வேண்டுமென்றுதான் அவர் மருந்தை உட்கொண்டாரே தவிர அவரைப் பொறுத்தவரையில் அவருக்கு மருந்துகளிடம் நம்பிக்கையே கிடையாது. அவர் சிறந்த டானிக்காகக் கருதுவதெல்லாம் சிரிப்பைத்தான். அதைத்தான் அவர் எல்லோருக்கும் கொடுத்துக் கொண்டிருந்தார். அநேக டாக்டருக்கும் அதைக் கொடுத்துத்தான் குணப்படுத்தி யிருக்கிருர்.

எந்தத் துயரமான கட்டத்திலும் கலைவாணரால் சிரித்துக் கொள்ள முடியும். கடைசி வரையில் அவரிடம் மாபெரும் துணையாக இருந்த சக்தி இது ஒன்றுதான்.

ஒருமுறை சென்னைக்கு வந்து கொண்டிருந்த கம்பெனி வேன் சிறு விபத்துக் குள்ளாகியது. நல்ல வேளையாக உயிர்ச் சேதம் இல்லை. சேதி கேட்டு கலைவாணர் காரில் ஓடி வந்தார். ''நல்ல வேளை உயிர்ச்சேதம் இல்லை'' என்று சொல்லிக் கொண்டே காரிலிருந்து கீழே சிதறிக் கிடந்த பழங்களை எடுத்து சூழ இருந்தவர்களுக்குஎல்லாம் ஒவ்வொன்ருக கொடுத்து விட்டுத் தானும் ஒன்றை எடுத்துத் தின்றுகொண்டிருந்தார். அப்பொழுது அந்த வழியாகப் போய்க் கொண்டிருந்த பஸ் இவரைக் கண்டதும் நின்று விட்டது. பிரயாணிகள் எல்லோரும் கீழே இறங்கி வந்து, ஆஹா...என். எஸ். கே. என்று சொல்லி சிரித்துக் கொண்டே பக்கம் வந்தார்கள். ஒரு பிரயாணி 'என்ன சேதி வேன் இப்படிக் கிடக்கிறதே''என்று கேட்டார். அதற்கு என். எஸ். கே.''ஒண்ணுமில்லே, பழம் சாப்பிடணும்ணு நினைச்சோம். உடனே காரை இப்படி சாய்த்து வச்சிட்டு பழம் சாப்பிட்டுக கொண்டிருக்கோம். விஷயம் இவ்வளவுதான்'' என்று சிரித்துக் கொண்டே சொன்ஞர். ஒரு விபத்துச் செய்தி கூட, கலைவாணருக்கு நகைச்சுவைதான.

அவருக்கு யாரைப்பற்றியும் எப்பொழுதும் நகைச்சுவை பேசத் தெரியும். எனினும் இடம் தெரியாமல் பேசி எதிராளியைப் புண் படுத்தி விடமாட்டார். இங்கிதமாகப் பேசுவார்.

ஒருதடவை ஒரு கழைக்கூத்தாடி குற்ருலத்தில் இவர் தங்கியிருந்த இடத்தில் வந்து வித்தை காட்டினுன். ஒரு சிறுமியைப் பின்புறமாக வளைந்து கையைக்கொண்டு காலைத் தொடச்செய்து அவள் கழுத்தில் ஒரு வாழைக்காயை வைத்தான். ஒரு கூர்மையான வாளினுல் ஆடிப்பாடிக்கொண்டே இதோ இந்த வாழைக்காயை வெட்டுகிறேன் என்று ஒரே வெட்டாக

வெட்டிவிட்டான். கலைவாணர் திடுக்கிட்டுப்போனார். காய் மட்டும் இரண்டு துண்டாகச் சிதறியது. அந்தச் சிறுமியின் உடலிலே துளிக்காயம்கூடப் படவில்லை. எனினும் கலைவாணருக்கு இந்த வேடிக்கை பிடிக்கவில்லை. "ஏய் போதும்ப்பா" என்று சொல்லியவாறே சட்டைப் பையிலிருந்த பண நோட்டுகளை அப்படியே அவன் கையில் எடுத்துக் கொடுத்தார். எவ்வளவு என்று அவருக்கும் தெரியாது, அருகில் இருந்த எனக்கும் தெரியாது. எத்தனை என்று எண்ணிக் கொடுக்கும் பழக்கம் அவரிடம் என்று இருந்தது, இன்று இருக்கப் போகிறது? அவன் அதை வாங்கிக் கொண்டு "சாமி இப்படி ஒரு இருபத்தைந்து ரூபாயை சேந்தாப்பிலே பாக்கணும்னு மூணு வருஷமா நெனைச்சுக்கிட்டிருந்தேன் சாமி. ஒரு நிமிஷத்தில் நீங்க தந்திட்டீங்க சாமி. நீங்க நல்லாயிருக்கணும். இன்னும் கொஞ்சம் வேடிக்கை காட்டட்டுமா சாமி" என்றான். "போதும்பா" என்றார்.

"ஏன் சாமி என் வேடிக்கை பிடிக்கலையா" என்று கேட்டான். அதற்கு இவர் "பிடிக்குது. ஆனால் ஒரு விஷயம். குழம்புக்காக வாழைக்காயை அறுவாமனையில் வச்சு வெட்டினால் என்ன. பாவம் ஏன் இந்தச் சின்னக் குழந்தை கழுத்தில் வைத்து வெட்ற" என்றுசிரித்துக்கொண்டே கேட்டார். உடனே கழைக்கூத்தாடி கீழே விழுந்து கும்பிட்டு "சாமி எத்தனையோ சமீந்தார்கள் வீட்டிலே வேடிக்கை காட்டினேன். மந்திரிகள் முன்னாலே காட்டினேன். வேறே சினிமா நடிகங்க எல்லாம் வந்தாங்கோ அவங்கள்ளாம் இந்தக் குழந்தைக்கு இவ்வளவு இரக்கப்படலை சாமி. நீங்கதான் இரக்கப்பட்டீங்க. நீங்க தங்கமான சாமி, நீங்க தீர்க்காயுசா இருக்கணும்" என்று இவர் காலைத் தொட்டுக் கும்பிட்டுவிட்டுப் போனான்.

கம்பெனியில் ஒருமுறை எதற்கும் கோபப்பட்டறியாத நான் கோபப்படும்படியான சந்தர்ப்பம் சமையல்கட்டில் ஏற்பட்டுவிட்டது. கோபம் என்னுள் பொங்கிக்கொண்டு வந்தது. அங்கிருந்த ஒரு பையனை ஏசுவதற்கு ஏச்சும் வாய்க்குள் வந்துவிட்டது. எனி

னும் பல்லைக் கடித்துக்கொண்டு பேசாமல் திரும்பினேன். பின் பக்கம் கலைவாணர் நின்றுகொண்டு சிரித்தவாறே ''ஆங்......... இப்படித்தான் கோபத்தைச் சவைத்துத் தின்னுடணும். இந்நிலை எல்லாருக்கும் வந்திட்டா கோர்ட்டுகள் இருக்கிற இடத்திலேகூட வேற ஏதாவது உபயோகப்படற ஆபீசுகளை வச்சுக்கலாம்'' என்றார்.

கலைவாணர் சாதாரணமாகப் பேசினாலே அவரையறியா மலேயே அதனுள் ஒரு நகைச்சுவை பதுங்கி இருக்கும். குற்றால அருவி; நமக்கு அழகு தரவேண்டுமென்று மேலிருந்து விழு கிறது. தானாக விழுகிறது. அழகாக இருக்கிறது. அப்படிப்பட்டது தான் அண்ணனின் நகைச்சுவை அழகும்.

திருச்சி தி. மு. க. மாநிலமாநாட்டுக்கு புத்தர் வில்லுப்பாட்டு எழுதுவதற்காக எதார்த்தம் பொன்னுச்சாமிப் பிள்ளையையும் தனது காரியதரிசி ராமதாசையும் என்னையும் பெங்களூருக்குக் கூட்டிக்கொண்டு போனார். காரில் போகும்போது வேறு ஏதாவது பேச்சுவரும். ''புத்தர் என்ன ஆனார்'' என்று கேட்பார். அதற் குள் வேறுபேச்சு வந்துவிடும். நாலைந்து நாள் அங்கு தங்கினோம். அவர் இந்த வில்லுப் பாட்டுக்காக ஒரு மணி நேரம்தான் செல வழிக்க முடிந்தது. எனினும் அதற்குள் எத்தனை கற்பனைகளைச் சொன்னார் தெரியுமா? அவைகளில் ஒன்றே ஒன்று இன்னும் நினைவு இருக்கிறது. போதி மரத்தின்கீழ் புத்தன் இருந்துகொண்டு இப்போதுள்ள ஞானத்துக்காக ஏற்பட்டிருக்கும் மந்திரங்களைச் ஜெபித்திருக்க மாட்டான். தவசி கோலத்தில் உட்கார்ந்து கண்ணை மூடிக்கொண்டு ''அயோக்கியப் பசங்க. முட்டாப்பசங்க, அட்டூழியம் பண்றாங்களே, அயோக்கிய பசங்க, முட்டாப் பசங்க, அட்டூழியம் பண்றாங்களே, மடமை என்னைக்கு நீங்கும்? அறிவு என்னைக்கு ஓங்கும்? மனமே! மனமே! மனமே! வளையாதே சரியா நில்லு! குணமே! குணமே! குணமே! கொடுத்துக் கொடுத்துப் பழகு! அயோக்கியப் பசங்க, முட்டாப் பசங்க, அட்டூழியம் பண் றாங்களே'' இப்படித்தான் ஜெபித்திருப்பான் என்று நடித்துக் கொண்டே சொன்னார்.

நன்ருக வசனம் எழுதும் ஒருவரைப்பற்றி, ஒரு நண்பர் அவரிடம் பேசிக்கொண்டிருக்கும் பொழுது "என்ன இருந்தாலும் அந்த வசன கர்த்தா ஈவிரக்கம் இல்லாதவர்" என்று சொன்ஞர். அதற்கு கலேவாணர் சிரித்துக்கொண்டே "அவர் ஒரு மனுஷன் இல்லீங்க. வசனம் தயார்பண்ற மிஷின்" என்று சொன்ஞர். நண்பர் வாய்விட்டுச் சிரித்தார்.

ஒருவனேக் கலேவாணர் விரும்பிப் பேசிஞலும் அதில் நகைச்சுவையைக் காணலாம், வெறுத்துப் பேசமாட்டார். ஒரு வேளே வெறுத்துப் பேசவேண்டியது வந்தாலும் அங்கும் நகைச் சுவையைக் காணலாம்.

அளவுக்கு மீறிய கொடைக்குணம் தன்னிடம் இருப்பதால் அவர் அநேகரிடம் ஏமாளி என்ற பட்டத்தையும் வாங்கவேண்டி வந்தது. இங்கிதம் தெரியாத ஒருவர் கலேவாணரிடம் வருஷத் துக்கொருமுறை வந்து என் குழந்தை செத்துப் போனது என்று நூறு ரூபாய் வாங்கிச் செல்வார். இப்படியே நாலேந்து வருஷ மாக நடந்தது. இவரும் கொடுத்துக்கொண்டே இருந்தார். பொறுத்துப் பொறுத்துப் பார்த்தார். பொறுமைக்கும் ஒரு எல்லே வந்தது. ஆருவது தடவையாக அவர் இவரைப் பார்க்க வந்தார். வந்தவர் வாசலில் செருப்பைக் கழட்டிவிட்டு பாயில்வந்து உட் காருவதற்குள்ளேயே நூறு ரூபாய் நோட்டை எடுத்து அவரிடம் கொடுத்து "சீக்கிரமாப்போயி குழந்தையை டாக்டரிடம் கொண்டு காட்டி குழந்தையைச் சாகாமல் பார்த்துக்கொள்ளுங் கள்" என்று சொன்ஞர்! என். எஸ். கே. ஏமாளியல்ல, எல்லாம் அவருக்குத் தெரியும், எனினும் ஏனே இப்படியிருக்கிருர் என் பதை நான் அன்றுதான் புரிந்தேன். இன்ஞெருவராயிருந்தால் வருடக்கணக்காக ஏமாற்றிப் பணம் வாங்கியதற்காக உதைத் திருப்பார். இவரோ அந்தக் கயவனேயும் சிரிக்கவைத்துத் திருத்தி விட்டார். இந்த நிலேயிலும் சிரிக்கிறது, சிரிக்க வைக்கிறது என்ருல் அது நிச்சயமாக ஒரு நகைச்சுவைப் பிறவியால்தான் முடியும்!

இந்தக் காலத்தில் நடைபெறும் நாடகம் சினிமாக்களில் சில நகைச்சுவை நடிகர்கள் வந்து நகைச்சுவை வசனங்களைப் பேசிய போதும் மக்களுக்குச் சிரிப்பு வருவதில்லை. கலைவாணர் மண மகள் என்ற படத்தில் ஒரு காட்சியில் வில்லனால் அடிபட்டு தாங்க முடியாமல் கதறுகிறார். மக்கள் அப்போதும் சிரித்துவிட் டார்கள். வில்லனை நோக்கி ''விபசாரத்தைச் சாகுபடி செய்யா தேடா சண்டாளா'' என்று உருக்கமாகவும் கோபமாகவும் புத்தி சொன்னார். மக்கள் அப்போதும் சிரித்தார்கள். இதுபோலத்தான் வாழ்விலும், ஏதாவது உருக்கமான சிந்தனை செய்யும்போது அவரை பார்த்து விட்டாலும் மக்கள் சிரிப்பார்கள். உடல் மிகவும் நலிவுற்றிருக்கும்போது தன்னைப் பார்க்க வந்த மக்கள் ஆஸ்பத் திரியைச் சூழ நின்றுகொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்த தும் டாக்டரின் சொல்லையும்மீறி தன்னைத் தள்ளுவண்டியில் வைத்து ஜனங்கள் பக்கம் தள்ளிக்கொண்டு போகுமாறு தன் கம் பெனி ஆளிடம் சொன்னார். மிகவும் சோர்வுடன் இருந்த கலை வாணரை அந்த நிலையிலும் மக்கள் பார்த்து மகிழ்ந்தார்கள், சிரித் தார்கள். கையெடுத்து வணங்கினார்கள். கலைவாணர் வாழ்க என்ற வாழ்த்துகள் எல்லாத் திசையிலும் ஒலித்தன. தன்னைப் பார்த்து மக்கள் சிரிக்கக் கூடாது என்று அவர் நினைத்த இக்கட் டான நேரங்களில்கூட அவரைக் கண்டால் மக்களுக்குச் சிரிப்புத் தான். இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்பு தினமும் தவறா மல் பந்துவிளையாடுவார். விளையாட்டு மைதானத்துக்கு அவர் வந்த கால்மணி நேரத்துக்குள்ளாக சுமார் இருநூறு ஆட்களா வது கூடிவிடுவார்கள். விளையாட்டிலே இவர் வெற்றிகண்டா லும் மக்கள் சிரிப்பார்கள். தோற்றாலும் மக்கள் சிரிப்பார்கள். அதனால்தான் அவரை நகைச்சுவைப் பிறவி என்கிறேன். பல ஆண்டுகளுக்கு முன்பு நாகர்கோவில் வீதியிலும் நாடகக் கொட்டகைகளிலும் மக்கள் தாகம் நீக்கச் சோடா உடைத்துத் தந்த கிருஷ்ணன், பிற்காலத்தில் சென்னை, சுடுகாட்டிலே எரிந்து கொண்டிருக்கும் தன் சிதையைப் பார்க்க ஏழெட்டு லட்சம் மக்களை சம்பாதித்துக் கொண்டார். காலேஜ்

பெண்களும், கைக்குழந்தைத் தாய்மார்களும் பிச்சைக்காரர்களும், எதுவுமே புரியாத பைத்தியக்காரர் களும் கூட, சுடுகாட்டில் அனுதாபக் கூட்டமெல்லாம் நிகழ்ந்து முடிந்து கலைந்த பிறகு, கலைவாணரின் உடலிலே இரக்கமற்ற நெருப்பு பற்றி எரிந்துகொண்டிருந்த அந்த நேரத்திலும் சுடு காட்டுக்கு உள்ளே ஓடிவந்து சூழநின்று பார்த்துக் கொண்டிருந் தார்கள். அன்று மாலை மீண்டுமொரு முறை சுடுகாட்டுப் பக்கம் சென்று எரிந்து கொண்டிருக்கும் சிதையைப் பார்த்தேன். அப் பொழுதும் அங்கு ஒரு கூட்டம் அந்த எரியும் சிதையைப் பார்த் துக் கொண்டிருந்தது. பார்த்துக்கொண்டிருந்த கூட்டத்தில் இருந்த ஒரு பையன் புரிந்தோ புரியாமலோ "இன்னிக்கு காலை யிலே எழுந்திருச்சுக் கஞ்சித்தண்ணி இல்லாமே கஷ்டப்படு கிறனே கடவுளே" என்று பாடினன். இன்னொரு பையன் அவனைத் தொடர்ந்து "அவன் பொண்டாட்டி புள்ளை குட்டிப் பொழைக்க என்ன செய்வாங்கோ புயல் காற்று வந்ததாலே கடவுளே—அண்ணன் போனவன் திரும்பலையே கடவுளே என்னை இப்பொறப்புப் பொறக்க வச்சியே கடவுளே" என்று ஒருபடத்தில் கலைவாணர் பானையில் அடித்துக் கொண்டு பாடியது போலவே, பாடினன். சிதையிலிருந்து குபு குபு வெனப் புகை, கடலை நோக் கிப் போய்க்கொண்டிருந்தது. என்னல் அங்கு நிற்க முடிய வில்லை வீடுதிரும்பினேன். எனினும் "அண்ணன் போனவன் திரும்பலையே கடவுளே" என்ற அடி மட்டும் என் காதில் ஒலித்து ஒலித்து என்னைச் சித்திரவதை செய்து கொண்டிருந்தது.

சிதையிலிருந்து எரிந்துகொண் டிருக்கும் போதும் சூழ நிற்ப வர்களின் உள்ளத்தை ஒரு விநாடியாவது சிரிக்க வைத்த அவரை ஒரு நகைச்சுவைப் பிறவி என்பதில் என்ன தவறு?

மக்கள் அவரை என்னவோ தங்களுக்கு சொந்தமான ஒரு வர் போலத்தான் கருதிப் பேசுவார்கள். சிரித்துக் கொள்வார்கள். அநேக நேரங்களில் அநேக இடங்களில் அவருக்கே அவரிடம் இல்லாத உரிமையை மக்கள் அவரிடம் காட்டியிருக்கிறார்கள்.

நாடகக் குழுவுடன் அயலூர் போயிருக்கும்போது அங்குள்ள கலைவாணர்அன்பர்கள், குழுவினரையே எதிர்த்து வம்பு பேசித் தள்ளிவிட்டு உள்ளே போய் கலைவாணரைப் பார்த்துச் சிரித்துக் கொள்வார்கள்.

ஸ்டுடியோவிலே பலதிசைகளிலும் இருந்து ஒளி மிகுந்த மின்சார விளக்குகளை ஏற்றியும் அணைத்தும் கொண்டிருக்கும் தொழிலாளிகளைப் பார்த்தால் எப்போதும் களைப்புடனேயே இருப் பார்கள்; இங்கு எவ்வளவோ பிரகாசமான விளக்கை ஏற்றுகிறார் கள். ஆனால் அவர்கள் வாழ்க்கையிலே, மை இருட்டு. அந்தக் கவலையிலேயே வேலை செய்து கொண்டிருக்கும் தொழிலாளர்கள் திடீரென ஒருநாள் மகிழ்ச்சியுடன் காணப்படுவார்கள். அதற்கு என்ன அர்த்தம் தெரியுமோ? என். எஸ். கே. அன்று, அங்கே படப்பிடிப்புக்கு வருகிறார் என்று அர்த்தம்!!

ஒரு ஆபீஸ் பையன் கை நழுவிக் காப்பி கிளாசைக் கீழே போட்டு உடைத்து விட்டான். அவன் உடலெல்லாம் பதறியது. வியர்த்தது. மேனேஜர் தன்னை அடித்து விடுவாரோ என்று நடுங் கிக் கொண்டிருந்தான். அப்போது அங்கே என். எஸ். கே. வந்து விட்டார். அவரைப் பார்த்தானோ இல்லையோ சிரித்து விட்டான். தாயைப் பிள்ளைகள் அணைத்துக்கொள்ளுமே அதுபோல அவரைப் போய் அணைத்துக் கொண்டான். ''இனிமே இப்படியெல்லாம் கீழே போடமாட்டான். விட்டுடுங்க'' என்று அவனைத் தட்டிக் கொடுத்தார். இது, இன்னொரு கம்பெனிக்குப் பாட்டு ஒத்திகைக் குப் போயிருக்கும் போது, நடைபெற்ற நிகழ்ச்சி. அந்தக் கம் பெனியிலே ரெம்ப நாள் வேலை பார்த்துக்கொண்டிருந்த யாரோ ஒரு பையனுக்கு, அந்தக் கம்பெனியில் உள்ள மேனேஜர் முதலாளிகளிடம் அன்புறவு ஏற்படவில்லை. வந்திருக்கும் மற்ற வர்களிடமும் ஓடவில்லை. ஒத்திகைக்கு வந்த என். எஸ். கே. யிடம் மட்டும் ஒருவிதப் பற்றுதல். அபாயகரமான நிலையிலும் அவரைக் கண்டதும் ஒரு சிரிப்பு.

உலகம் தன்னை விரும்பியதற்குக் காரணம் தனது முயற்சி தான் என்று அவர் கடைசிவரை சொல்லிக் கொண்டிருந்த

போதும், என்னைப் பொறுத்தவரையில் அவர் ஒரு நகைச்சுவைப் பிறவி என்றுதான் காரணம் சொல்லுவேன்.

முயற்சியால் எதுவும் பலிக்கும் என்றால் டாக்டர்கள் எவ்வளவு முயன்றும் அவரைப் பிழைக்க வைக்க முடியவில்லையே அது ஏன்?

இந்தப் பிறவியின் நினைவுகளுடன் அடுத்த பிறவியில் அவரைச் சந்திக்க நேர்ந்தால் நான் இதைத்தான் அவரிடம் முதலில் கேட்பேன்.

முயற்சியில் எனக்கும் நம்பிக்கை உண்டு. ஆயினும் கலைவாணருக்கு இருந்த அளவில் இல்லை. அந்த அளவில், நான் இயற்கையை நம்புகிறேன். அதனால்தான் கலைவாணரை ஒரு நகைச்சுவைப் பிறவி என்கிறேன்.

கொஞ்ச காலமாக இதிலும் சிறிது சந்தேகம் இருந்தது. இந்த சந்தேகமும் ஒரு பொதுக் கூட்டத்திலே நீங்கிவிட்டது. அப்படி அங்கே என்ன நிகழ்ந்தது என்றால்.........?

சர். சி. பியும் காமராஜுமே என். எஸ். கே. யைக் கண்டதும் சிரித்து விட்டார்கள்! இவர்களையே ஒரு பிறவி சிரிக்க வைக்கிறது என்றால், அது நிச்சயம் ஒரு நகைச்சுவைப் பிறவிதானே!

நீங்களே சொல்லுங்கள்!

# கலைவாணர்—ஒரு சீர்திருத்தவாதி

தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் கலையுலகின் தலைவிதியையே மாற்றி அமைத்த முதல் பெருமை கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனைத்தான் சாரும்.

அவருக்கு முன்னே வாழ்ந்திருந்த கலைஞர்களில் ஒரே ஒருவராவது முதலாளித்வத்தையும் மூடத்தனத்தையும் எதிர்த்து வெற்றிகண்டதில்லை. ஓரிருவர் எதிர்த்தனர். எதிர்ப்பில் நயம் இல்லாததால் எதிராளிக்குப் பதிலாக இவர்களே அழிய நேரிட்டது. கலைவாணருக்கோ எதையும் இனிமையாக எதிர்க்கும் திறன் இயல்பிலேயே அமைந்திருந்தது. இவர் எதிர்த்த முறையைப்பற்றி ''கலைவாணரிசம்'' என்றொரு ஏடு எழுதி வெளியிட்டாலும் நாட்டுக்குப் பயன் உண்டாகலாம்.

யாரைச் சீர்திருத்த வேண்டுமென்று விரும்புகிறாரோ அவரது மனம் அணுவளவும் புண்படாமல் அவரைத் திருத்திவிடும் திறமை கலைவாணருக்கு நிகராக வேறு யாரிடமாவது இருந்தது என்றால், அந்த ஒருவர் திரு. வி. க. தான்.

இனிமையாக இங்கிதமாக காந்தி ஆங்கிலேயரிடம் இந்திய சுதந்திரம்பற்றிப் பேசினாரே அப்படிப் பேசுவார் கலைவாணர்; எம். ஆர். ராதாபோல அல்ல!

இயல்பாகவே நல்ல உள்ளம் பெற்றவராதலால் எதிராளியும் புண்படக் கூடாது என்று நினைத்தார். அதனால்தான் அவரிடம் எழுந்த கலைப் படைப்புகள் யாவும் மாசு மருவற்றதாக—மாற்றாரும் போற்றும் மதிப்புக்குரியதாக—மறுமலர்ச்சித் தெளிவுடன் விளங்கியது.

நந்தன் கதாகாலட்சேபத்தில் நாட்டம் இல்லாத பலரும் அதில் உள்ள மெட்டுக்களுக்காகவும் கதை அமைப்புக்காகவும் கேட்டு ரசித்துக் கொண்டிருந்தார்கள். இதைப் புரிந்து கொண்ட கலைவாணர் அதே கதையமைப் பிலும் மெட்டுகளிலும் கிந்தனுர் கதையை அமைத்து காலட் சேபம் செய்தார். முந்தியது அடிபட்டுப் போய் விட்டது.

திருநெல்வேலியிலே ஒரு நிகழ்ச்சி. யாரோ ஒரு பாகவதர் நெல்லையப்பர் கோவில் வசந்த மண்டபத்திலே நந்தனுர் கதை நடத்தினுர். அதே நேரத்தில் அதே ஊர் தியேட்டர் ஒன்றில், கிந்தனுர் கதாகாலட்சேபத்தை கலைவாணர் நடத்தினுர். கோவி லில் என்ன நிகழ்ச்சி நடந்தாலுமே குழுமி நெருக்கும் அநேக பக்தகோடிகளே, கலைவாணரின் நிகழ்ச்சியைக் காண வரிசையில் நின்று அனுமதிச் சீட்டுப் பெற்று உள்ளே வந்தார்கள். ரசித்தார் கள். கைதட்டினுர்கள். கிந்தனுர் கதையில் கிருஷ்ணன் ஒன்றும் மோசமாக சொல்லிவிடவில்லையே; கல்வியின் அவசியத்தைப் பற்றித்தானே சொல்கிருர் என்றும் புகழ்ந்து கொண்டார்கள்.

அடுத்த சில மாதங்களில் பக்கத்து ஊரில் உள்ள ஒரு சபாவில் கிந்தனுர் நிகழ்ச்சியைக் கலைவாணர் நடத்திக்கொண்டிருந்தார். முதல் வரிசையிலே முதல் ஆளாக, அன்று நந்தன் சரித்திரம் நடத்திய பாகவதர் வந்து உட்கார்ந்திருந்தார். கிந்தனைப் பிரமாத மாக ரசித்தார். காலட்சேபம் முடிந்ததும் மேடைக்குள்ளே வந்து கலைவாணரை அணைத்துக்கொண்டு பாராட்டி "உங்களுக்கு சரஸ் வதியோட அனுக்கிரகம் பூரணமாக இருக்கிறது நீங்கள் தீர்க்காயுசா இருக்க வேண்டும்" என்றும் ஆசி கூறிப் போனுர். மனம் நிறைந்த மகிழ்வுடன் கலைவாணர் நன்றி கூறினுர்.

'தின்னவரும் புலி தன்னையும் அன்போடு சிந்தையில் போற் றிடுவாய்' என்ருரே அமரகவி, இந்த மனப் பண்பை கலைவாண ரின் ஒவ்வொரு படைப்பிலும் காணலாம், சதிலீலாவதி முதல் யார் பையன் வரை.

இன்று கலையுலகில் அநேகர் சீர்திருத்தம் விரும்பி கரடியாக நின்று கத்துகிறார்கள். தாங்கள் விரும்பும் சீர்திருத்தம் ஏற்படும் முன்பே இவர்கள் பலாத்காரவாதிகள் என்ற கெட்ட பெயருக்கு ஆளாகி விடுகிறார்கள். சீர்திருத்தும் இவர்களைவிட சீர்திருந்தாத பழைய நபர் தேவலையோ என்றுதான் தோன்றுகிறது.

கடவுளைப்பற்றி வசனம் வந்தால் நான் பேசமாட்டேன் என்று திடித்தனமாக, என்றுமே கலைவாணர் பட முதலாளிகளிடம் சொன்னதில்லை. படமுதலாளிகள் என்ன சொன்னாலும் ஆமா. சரி. என்று தலையாட்டுவார். அவர்கள் விருப்பம் போலவே படம் எடுத்துக் கொடுப்பார். பட முதலாளிக்கு திருப்தியும் இருக்கும். படம் தியேட்டருக்கு வந்த பிறகுதான் ''ஆஹா! என். எஸ். கிருஷ்ணன் இதற்குள் இவ்வளவு சீர்திருத்தம் வைத்திருக்கிறாரா?'' என்பதை எல்லோரும் புரிய முடியும்!

அழுதுகொண்டிருக்கும் குழந்தையை அழாதே அழாதே என்று அடித்து மேலும் சிலர் அழச்செய்து விடுவார்கள். அந்த ரகத்தைச் சேர்ந்தவர்கள்தான் மற்ற கலைஞர்கள். கலைவாணரோ தட்டிக் கொடுத்து குழந்தையின் அழுகையைச் சிரிப்பாக்கும் ரகத்தைச் சேர்ந்தவர்.

பொதுவாழ்வில் கலைவாணரின் வாரீசுகளாக தங்களைக் கருதிக் கொண்டிருக்கும் நல்ல புத்திபடைத்த புரட்சிக் கலைஞர்கள், கலைவாணர் மனப்போக்கை நன்றாக உணரவேண்டும். காந்தி மகான் உலக நிலத்தில் கால் ஊன்றிவிட்டது போல கலைவாணர் தமிழ் நிலத்தில் வேரூன்றி விட்டார். காந்திக்கு ஒரு சரியான வாரீசு இல்லை. அதுபோல கலைவாணருக்கும் இல்லாமல் போகக் கூடாதே என்று கவலைப் படுகிறேன்.

ஸ்டுடியோவிலே கேமராவுககுப் பூஜை போடும் போது கலைவாணரிடமும் கற்பூரத்தட்டைக்கொண்டு காண்பிப்பார்கள். உடனே அதிலே ரெம்ப நம்பிக்கை உள்ளவர் போல பக்தீ சிரத்தையுடன் கையெடுத்துத் தொட்டு கண்ணில் வைத்து வணங்கிக் கொள்வார். ஏன் அப்படி? எல்லோரும் ஒருமாதிரி

யாகக் காணப்படும்போது தான் மட்டும் தனியாக நடந்து கொண்டால் அது சபைக்கு அழகல்ல. அவர்கள் மனமும் புண்படும் என்று கருதுபவர் கலைவாணர். ஒரு தடவை என்னிடமும் இந்தக் கருத்தைச் சொன்னார். 1950-ல் ஒரு முறை திருநெல்வேலி கிராமத்தில் உள்ள என் பெற்றோர்களைக் காண வந்தார். என் பெற்றோர்கள் அவருக்குத் திருநீறு கொடுத்தார்கள். மிகவும் பணிவுடன் வாங்கித் தமது நெற்றி முழுமையும் பூசிக்கொண்டார். அதுபற்றிப் பிறகு ஒரு நாள் கேட்டேன். கல் கடவுளிடம் இருக்கும் கோபத்திற்காக கண்கண்ட கடவுளான பெற்றோர்களை ஏன் பகைத்துக்கொள்ள வேண்டும் என்றுதான் பூசிக் கொண்டேன் என்றார்.

கம்பெனியில் நவராத்திரி கொலு வைப்பார்கள். அதையும் வைத்தவர்களுடன் இவர் நின்று பேஷ் பேஷ் என்று பிரமாதமாக ரசிப்பார். ''இது மடமை. நான் ஒரு சீர்திருத்தவாதி. நான் உலவும் இடத்திலேயே இது நடைபெறலாமா?'' என்று கர்ஜனை புரிய மாட்டார். அன்புதான் கடவுள் என்பதை அன்பாகத்தான் சொல்ல வேண்டுமே தவிர அடித்துத் துன்புறுத்தி சொல்லக் கூடாது; அதைவிட திருப்பதி மலை எவ்வளவோ பரவாயில்லை என்பார்!

ஒரு ஊருக்குப் போய்க்கொண்டிருக்கும்போது வீதியோரம் மரத்தடியில் உட்கார்ந்து கொண்டிருந்த ஒருவரைக் கண்டதும் காரை நிறுத்தச் சொல்லி அவர் அருகில் போய் உட்கார்ந்தார். ''என்னய்யா, தனியா என்ன பண்றீங்க?'' என்று கேட்டார். இவரைக் கண்டதும் அவர் மகிழ்வுடன் ''ஜோதிடம் பார்க்கிறேன்'' என்றார். ''எனக்கும் பாருங்கள்'' என்று கை நீட்டினார். ஜோதிடர் என்னவெல்லாமோ சொன்னார். ஒன்றும் சரியாய் இல்லை. எனினும் அவரது திருப்திக்காகக் கலைவாணர் ''ஆமா ஆமா நீங்க சொல்வது உண்மைதான். ரெம்ப நல்லா சொல்லிட்டீங்க'' என்று சொல்லிவிட்டு பணமும் கொடுத்துவிட்டு காருக்கு வந்தார். ஜோசியம் சரியில்லை என்றால் அவர் மனம் புண்படும் அல்லவா! அதனால்தான் ஜோசியத்தைச் சரி சரி என்று பொய்

யும் சொன்னார். ஒருவர் மனம் புண்படக் கூடாது என்பதற்காக பொய்யும் சொன்ன அவரிடம்,

''பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்''

என்ற குறளை நினைவூட்டினேன. இதையும் ரசித்தார்; என் மனமும் புண்படக் கூடாது, என்பதற்காகத்தானே என்னவோ!

ஒருவேளை நமது பேரப்பிள்ளைகள் காலத்திலே கோவிலுக்குள் போய்க் கடவுளை வணங்குவதுதான் சீர்திருத்தம் என்ற நிலை ஏற்பட்டாலும் ஏற்படலாம். அதனாலே அதுதான் சரி இதுதான் சரி என்று அடிபிடி சண்டை போடக் கூடாது. ஊருடனும் உலகத்துடனும் காலத்துடனும் ஒட்டித்தான் போக வேண்டும் என்று ஒரு தடவை மிகவும் உருக்கமாகச் சொன்னார்.

கடுமை என்பதே அவருக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்காது. காந்தி மகானின் அஹிம்சைக் குளத்திலே, கலைவாணரின் மனம் ஒரு தாமரை மலர்போல் விரிந்து அழகு தந்துகொண்டிருந்தது.

''கண்ட கற்களை கடவுள் என்றது அந்தக்காலம்
—அதுகளை
துண்டுகளாக்கி ரோடுகள் போடுவது இந்தக்காலம்''

இப்படி ஒரு அடியை நாராயணகவி நல்லதம்பி படத்திற்காக எழுதிக் கொடுத்தார். அநேகரின் மனதைப் புண்படுத்தும் என்பதற்காக கலைவாணர் இந்த அடியைமட்டும் நீக்கிவிட்டார்.

நான் அவருக்கு எழுதிய ஒரு பாடலில் ''நல்லறிவு இல்லா நாடகத்துக்கு கல்லெறி ஒன்றே மருந்து'' என்று எழுதியிருந்தேன். இதைப் படித்துவிட்டுக் கலைவாணர் ''இதுவும் சிலபேர் மனதைப் புண்படுத்தும்'' என்று இந்த அடியைமட்டும் நீக்கிவிட்டார்.

ஐம்பது—அறுபது நாடகம்.
எவ்வளவு மகத்தான புரட்சி.

''அட மந்திரிகளே! அறுபதாம் ஆண்டிலேயாவது இந்த நாட்டை இப்படி நல்ல நிலைமைக்குக் கொண்டுவந்துவிடுவீர்களா?'' என்ற கேள்வியின் உட்பொருள்தான் அந்த நாடகம். ஆனால் அதை மந்திரிகளே பார்த்துக் கைதட்டிப் பாராட்டும் அளவுக்கு கலைவாணர் நயமாக எடுத்துக் கூறிவிட்டார்.

கலைஞன், கலையுலகில் மட்டுமே கிணற்றுத் தவளையாக இருந்துவிடக் கூடாது. அவன் உலகின் எல்லாத் துறைகளிலும் தொடர்புகொள்ளவேண்டும். அதுதான் சிறப்பு என்ற சீர்திருத்தத்தை தம் வாழ்க்கை மூலமாகவே சொல்லாமல் சொல்லிப் போய்விட்டார்.

கலையுண்டு தானுண்டு என்று வாழ்பவர்கள் கலை வியாபாரிகள் என்றார். கலைஞன், மாநாடுகளில் கலந்து கொள்ளவேண்டும், பொதுமேடை ஏறி முழக்கம் செய்யவேண்டும், எல்லாக் கட்சியுடனும் ஏக மனநிலையில் பழகவேண்டும், உள்நாட்டுக்குள் ஒரு ஊரையும் விட்டுவிடாமல் உலவி வரவேண்டும், அயல் நாடுகள் செல்லவேண்டும், புயல் வந்தால் நிதிதன்னைத் திரட்டவேண்டும், தேர்தலிலும் கலந்து கொள்ளவேண்டும். இதெல்லாம் கலைவாணர் இன்றையக் கலைஞர்களுக்கு சொல்லாமல் சொல்லிப்போயிருக்கும் சூட்சுமமான பாடங்கள்.

சீர்திருத்தம் பேசும் கலைஞர்களையே சீர்திருத்தியவர் அவர். இப்படி ஒரு உண்மையும் அவர் வாழ்வில் காணக்கிடக்கிறது. அவரது கடைசி நாட்களிலே அவர் ஜெனரல் ஆஸ்பத்திரியில் படுத்திருக்கும்போது அவரது நலனை விரும்பி அங்கே ஜன சக்தி வந்தது—திராவிட நாடு வந்தது—காங்கிரஸ் வந்தது—தமிழரசு வந்தது—தமிழ் நாடே வந்துவிட்டது. எம்மதமும் சம்மதம் என்ற பொது மதவாதி வள்ளுவரைப்போல வாழ்ந்து, முடித்துவிட்டார் கலைவாணர். இந்த உண்மையை எல்லோருமே புரியவேண்டும்; குறிப்பாகக் கலைஞர்கள் புரிவது நலம்.

ஒரு கலைஞன் என்பவன் கலைவாணரைப்போல இப்படிப் பொதுவாக வாழவேண்டுமே தவிர எனக்கு இந்தக் கட்சிதான்

பிடிக்கும்; நான் இதற்குத்தான் உயிர் விடுவேன் என்பது, ஒரே தினுசான வைட்டமின் சத்துள்ள உணவைத் தின்பதுபோலத் தான்—வேறு பல சாயங்கள் இல்லாத ஒரே வெள்ளைப் புடவை யைக் கட்டும் விதவை நிலைதான் அது! கலைவாணரின் கடைசி யாத்திரையில் அத்தனை லட்சம் மக்கள் கூடினார்களே, அது இத்தகைய கட்சி வேறுபாடற்று மக்களிடம் பழகிய கனிவுக் காகத்தான். இதிலிருந்து பொது மக்கள் ஒரே ஒரு கட்சியை விரும்பிக் கொண்டிருக்கிறார்களா? எல்லாக் கட்சிகளும் இணை யும் ஒரு பொது நிலையை விரும்புகிறார்களா? என்பதையும் கணக் கிட வேண்டுகிறேன்.

''உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல் மற்றது தள்ளினும் தள்ளாமை நீர்த்து'' என்ற குறளின்படி இன்று எல்லோருமே கலைவாணராக நினைப்பது ஒரு நல்ல ஆசைதான். அதற்கும் ஒரு தகுதி உண்டு. அந்தத் தகுதியும் இல்லாதவர்கள் அப்படி ஆசைப் படுவது பரிதாபத்துக்குரியதாகும்.

வறுமையில் வாடும் அனைவருக்கும் வாழும்வகை செய்ய வேண்டுமென்று அவர் மேடைகளிலும் படங்களிலும் முழக்கிய நாட்களைவிட அதைச் செயல் முறையில் காட்டி நடத்திய நாட் களே அதிகம்.

வாழும்வகை தெரியாமல் தவிப்பவர்களைக் காண நேரிட் டால் கலைவாணரின் அகமும் முகமும் இணைந்து கலங்கும். அன் பொழுகப் பேசுவார். அவர்களுக்கு வேண்டிய உதவிகளைச் செய்துவிட்டுத்தான் அடுத்த வேலையைப்பற்றி நினைப்பார்.

இன்றுள்ள கலைஞர்களோ சீர்திருத்தம் பேசுகிறார்கள். செயல் முறையைக் காணவே காணோம். ஏதாவது எப்போதாவது செய்தார்கள் என்றால் அது விளம்பர நோக்கிலேயே இருக்கிறது. இவர்கள் ஏன் ஒவ்வொரு ஊராகச் சென்று சீர்திருத்தம் பேச வேண்டும்? கேவலம் ஒரு கிராமபோன் ரிகார்டு செய்யும் வேலை யைத்தான் இவர்கள் செய்கிறார்கள் என்பேன்!

''நல்லதம்பி'' என்ற படத்திலே, ஒரே ஆடையைத்தாயும்மக ளும் மறைவில் நின்று மாற்றிமாற்றிக் கட்டிக்கொண்டு ஒருவருக் குப் பிறகு ஒருவர் வெளியே வந்து வழிப்போக்கனுக்கு விருந்துப சாரம் செய்த காட்சியை எடுத்துக் காட்டி, நாட்டின் அவல நிலையை அம்பலப்படுத்தி இருந்தார். இதுபோல வடநாட்டிலிருந் தும் ஏழ்மையைச் சித்தரித்து, ராஜ்கபூர் போன்றவர்கள் பட மெடுக்கிறார்கள். எனினும் அவர்களை சீர்திருத்தவாதி என்று சொல்ல முடிவதில்லை. ஏனெனில் படத்தில் அவர்கள் கூறும் இரக்க உணர்ச்சி வாழ்வில் துளியும் இருப்பதில்லை. என். எஸ். கிருஷ்ணனோ படத்தில் காட்டிய இரக்க உணர்ச்சிகளைவிட தன் வாழ்வின் ஒவ்வொரு மணி நேரத்திலும் அதிகமாகவே இரக்க உணர்ச்சியுடன் வாழ்ந்துபோயிருக்கிறார்.

குற்றாலத்திலே ஒரு நிகழ்ச்சி.

அன்று கொடிய குளிர், ஒரு கிழவன் நடுங்கும் தன் உடம்பைக் கைகளாலேயே போர்த்திக்கொண்டு தெருவில் போய்க்கொண்டிருந்தான். அதிகாலை நேரம். இவர் எழுந்து திண்ணையில் அமர்ந்து கால்மேல் கால்போட்டு ஆட்டிய வாறு வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தார். அப்போது அவர் கண்ணில் வீதியில் போகும் கிழவர் தென்பட்டுவிட்டார். அவ் வளவுதான் ''தாத்தா இங்கே கொஞ்சம் வாருங்கோ'' என்றார். வயோதிகர் வந்தார். உடனே அறைக்குள்போய் தனக்குரிய வேஷ்டி, சட்டை, ஒரு துண்டு, பெரிய கம்பளி அவ்வளவையும் எடுத்துக்கொண்டுவந்து தாத்தாவை அணியச்சொல்லி அவரை மகிழ்வு படுத்தி காபியும் கொடுத்து அனுப்பினார்.

ஒரு ராஜ்கபூருக்கோ அல்லது வேறொரு நம் நாட்டுக் கலை ஞருக்கோ இப்படி மனம் வருமா?

சீர்திருத்தவாதி என்றால் மேடைப்பேச்சு, புத்தகம், கலைப் படைப்பு இவைகளைச் சீர்திருத்தம் செய்பவன் மட்டுமல்ல, அவன் மனம் சீர்திருந்தியிருக்கவேண்டும். மற்றவர்களுக்காக உதவும் தன்மை சதா அங்கு காணப்படவேண்டும் என்று சீர்திருத்த

வாதிக்கும் இலக்கணம் வகுத்த பாரதியாரின் பாதையில் துணிந்து முதல் நடைபோட்டவர் நமது கலையரசர் என். எஸ். கே. ஒருவர்தான்.

சமத்துவம் தேவை என்று இன்றைய சீர்திருத்த வாதிகள் முழங்குகின்றார்கள். அவர்கள் என்றாவது ஒரு நாள் இரவு காட்டுப் பாதையில் தனது கார் நின்று விட்டாலுமே டிரைவர் பக்கம் சென்று என்ன ஏது என்று கேட்டு அப்பொழுது கூடச் சமத்துவமாகப் பழகுவதில்லை. டிரைவர் காரைப் பழுதுபார்த்து நன்றாக்கும் வரையில் இன்றையக் கலைஞர்கள் தங்களை டாடா, பிர்லாக்களாக நினைத்துக்கொண்டு தூரத்தில் உலவுவார்கள். என். எஸ். கே. போய்க்கொண்டிருக்கும் கார் அப்படிக் காட்டுப் பாதையில் நின்றுவிட்டால், அவர் என்ன செய்வார் தெரியுமா? மேல் துண்டை எடுத்துத் தலைப்பாகை கட்டிக்கொள்வார். டிரைவரின் அருகில் இருந்து சமத்துவமாக, அவரும் கூடமாட வேலை பார்ப்பார். டிரைவர் பஞ்சர் ஒட்டினால், இவர் பம்பை வாங்கி காற்றடைப்பார். கார் சரியாக வேலை செய்யாவிட்டால் இவரும் மற்றவர்களுடன் சேர்ந்து காரைத் தள்ளுவார். ஆறு, கால்வாய் கண்ட இடங்களில் காரை நிறுத்தச் சொல்லி உணவைப் பகிர்ந்து எல்லோருடனும் இருந்து சரிசமமாக உண்ணுவார். அவரிடம் ஒரு முதலாளிக்குரிய அறிகுறிகளையே காண முடியாது. இதையெல்லாம் இன்று சீர்திருத்தம் பேசும் எந்தக் கலைஞரிடமாவது காண முடியுமா?

என். எஸ். கே. பிலிம்ஸில் நேற்றுப் புதிதாகச் சேர்ந்த ஆபீஸ் பையன் முதல், நிரந்தரமாக அங்கேயே பெரிய பதவியில் இருப்பவர்கள்வரை ஒரே சுருதியில், ஒரே உரிமையில், அவரை 'அண்ணன்' 'அண்ணன்' என்றுதான் அழைப்பார்கள். அண்ணனும் அதை என்னவோ பெரிய மகாத்மா பட்டம் போல் கருதி ஏற்று கடைசிவரையில் மகிழ்ந்து கொண்டிருந்தார்.

நாலைந்து ஆண்டுகளுக்கு முன் அவரது ஆப்த நண்பர் ஒருவர், "என்ன அண்ணே இது. உங்க கம்பெனியிலே ஒரு, வரை

முறை இல்லையே. சமையல்காரனும் அண்ணன் என்கிறன். பெரியவர்களும் அண்ணன் என்கிறர்கள். யாராவது வெளியிலிருந்து புது ஆட்கள் வந்தால் என்ன நினைப்பார்கள்'' என்று கேட்டார். அண்ணனுக்கு இந்த முதலாளித்வக் கேள்வி பிடிக்கவில்லை. எனினும் அவர் மனம் புண்படும்படியும் எதுவும் சொல்ல வில்லை. ''தமிழ் நாட்டிலே என் கம்பெனியில் இருந்து தான் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' சட்டம் அமுல் ஆகுது என்று நினைத்துக் கொள்ளுங்களேன்'' என்று சிரித்துக்கொண்டே பதில் சொல்லி விட்டார். என். எஸ். கே. யிலேயே இருந்தவர்கள் இப்பொழுதுள்ள மற்றச் சீர்திருத்தக் கலைஞர்களையும், பழக்க தோஷத்தினுல் அண்ணே என்று கூப்பிட்டுவிட்டு அடுத்த விஞடியில் பல்லைக் கடித்துக் கொள்கிறர்கள்—வெறுக்கப் படுகிறர்கள். பிற்காலத்தில் இப்படி 'அண்ணே' என்று கூப்பிட்டதற்காக வெளியே விரட்டவும்படலாம். ஆச்சரியப்படுவதற்கில்லை.

கலையுலகில் மட்டுமல்ல, அரசியல் சமுதாய உலகிலும்கூட இத்தகைய மெய்யான ஒரு சீர்திருத்தவாதி இருப்பாரா என்பது கமிட்டி அமைத்துப் பரிசீலனை செய்யப்படவேண்டிய ஒரு குழப்பமான பிரச்னைதான்!

# கலைவாணர்—ஒரு டைரக்டர்

காலஞ்சென்ற தென்னாட்டின் கலைமேதை ராம்நாத்துக்கு வணக்கம் செய்துவிட்டு, இந்த அத்தியாயத்தை ஆரம்பிக்கிறேன்.

இன்றைய சினிமா உலகில் டைரக்டர் என்ற பெயருடன் எத்தனையோ சடலங்கள் உலவுகின்றன.

ஓரிரு நல்ல டைரக்டர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். எனினும் அவர்களது உள்ளம் கலை கலைக்காகவே என்ற செக்கு மாட்டு நிலையிலேயே வேலை செய்கிறது.

இப்படி இருக்கையில் கலை, வாழ்க்கைக்காகவே என்ற புதுப் பாதையை உண்டு பண்ணிநடைபோட்டு வெற்றிகண்ட முதன் முதல் டைரக்டர் கலைவாணர் ஒருவர்தான்.

ராஜா சாண்டோ காலம் முதலே கலைவாணருக்கு டைரக்ஷன் கலை அத்தனையுமே தெரியும். இவரது நகைச் சுவைப் பகுதிகளை இவரே எடுத்துக் கொடுத்து விடுவார். எனினும் மணமகள், பணம் என்னும் படங்களில்தான் அவர் டைரக்ஷன் செய்தார் என்பது மக்களுக்கும் அறிவிக்கப் பட்டது. அதில் பெயர் வந்து விடவேண்டும், இதில் வந்துவிடவேண்டும் என்று கலைவாணர் வாழ்வில் ஓடித்திரிந்ததே இல்லை. தன்னைத் தேடிவரும் புகழைக் கூட தன்னைச் சூழ்ந்தவர்களுக்குப் பகிர்ந்தளித்து அதிலும் ஒரு புகழைக் கண்டார். இன்று பட உலகில் பிரபலமாக இருக்கும் டைரக்டர்களில் அநேகர் ஒரு காலத்தில் மாணவ உணர்ச்சியுடன் கலைவாணரிடம் கைகட்டி பாடங் கேட்டவர்கள்தான்! அவர்களில்

ஒரு சிலரே, பிற்காலத்தில் வெளியே வந்து என். எஸ். கே. க்கு என்ன தெரியும் என்று கேட்டு நன்றி கொன்றதும் உண்டு. அப்பொழுதும் கலைவாணர் அவர்களைப் பாராட்டிப் பேசியதும் உண்டு. இப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தில் ''தன்னை யார் வளர்த்தது என்று சொன்னால் என்ன. உலகம் ரொம்ப மோசம், அண்ணே. உலகம் போகிற போக்கைப் பார்த்தால், தன் பெயருக்கு முன்னால் தகப்பன் பெயரின் முதல் எழுத்தை இன்ஷியலாக வைப்பதைக்கூட அநாகரீகம் என்று தள்ளிவிடுவார்களோ என்னவோ'' என்று நான் கேட்டேன். அதற்கு அவர் ''இப்படிப்பட்ட ஆசாமிகளை யெல்லாம் நன்றாக மன்னித்துவிடவேண்டும். அதுதான் தண்டனை'' என்றார்.

'ஐடியா ஐடியா' என்று இன்றுள்ள டைரக்டர்கள் ஸ்டையிலாக வானத்தைப் பார்ப்பதுபோல என். எஸ். கே, என்றுமே ஐடியாவை வானத்தில் தேடிப்பார்த்தது கிடையாது. சும்மா படுத்துக் கொண்டிருந்தவர் திடீரென எழுந்து ஒரு ஐடியா சொல்லி விடுவார். பல்லைத தேய்த்துக் கொண்டிருக்கும்போதே ஒரு ஐடியா சொல்லிவிடுவார். சிகரெட்டைப் புகைத்துக்கொண்டும் முகத்தை அருவருப்பாக வைத்துக்கொண்டும், மற்ற டைரக்டர்கள் கஷ்டப்படுவார்களே, அதெல்லாம் கலைவாணரிடம் கிடையாது எப்பொழுதும் சுபீட்சமாக வெற்றிலை போட்டுக்கொண்டிருப்பார். சில டைரக்டர்கள் ஸ்டுடியோவுக்குள் வந்துவிட்டால் அதெற்கென ஒரு தனி நடை நடப்பார்கள். இவர் அங்கேயும் அந்த நாகர்கோவில் நடைதான் நடப்பார். மற்ற டைரக்டர்கள் 'ஹலோ ஹலோ' என்றுதான் வரவேற்பார்கள். இவர் 'வருக வருக' என்று தனித் தமிழில்தான் வரவேற்பார். இதற்கெல்லாம் காரணம் என்ன? மற்றவர்களுக்கு தங்களை டைரக்டராக பாவனை செய்து கொள்ள வேண்டிய அவசியம் இருந்தது. இவருக்கு அந்த அவசியம் இல்லை.

எந்த இடத்தில் கேமராவை வைப்பது என்று எல்லா டைரக்டர்களும் நின்று நின்று பார்த்து கடைசியில் எந்த இடமுமே சரி

யில்லை என்று முடிவுபண்ண இரண்டு மூன்று மணி நேரம் பிடிக்கும். கலைவாணரோ செட்டுக்குள் வருவார்; ஒரு சுற்று சுற்றிப் பார்ப்பார். ''கேமராவை இங்கே கொண்டு வை'' என்பார். ''லைட்டுகள்'' என்பார். ஒரு நாற்காலியில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டே அந்தக் காட்சிக்குள்ள வசனங்களைத் தயார் செய்து விடுவார். உடனே நடிகர்களைக் கூப்பிட்டு நடிப்பு சொல்லிக் கொடுப்பார், அவ்வளவுதான். வேலை மிகவும் துரிதமாகவும், அருமையாகவும், இனிமையாகவும் நடைபெற்றுக் கொண்டிருக்கும். இடை இடையே நகைச்சுவை பேசி தொழிலாளிகளை சந்தோஷப்படுத்திக்கொண்டே இருப்பார்; அங்குள்ள தொழிலாளிகளுக்கெல்லாம் என். எஸ். கே. யைக் கண்டால் ஒரு 'லெனினைக்' கண்டது போல!

ஸ்டுடியோவிலே சில டைரக்டர்களுக்கென்று ஒரு தனிப்பட்ட நாற்காலி போடப்பட்டிருக்கும். அதில் ஜவஹர்லால் நேருவே வந்து உட்கார்ந்திருந்தாலும் சரி, டைரக்டருக்கு கோபம் வந்துவிடும். பட ஒப்பந்தத்தை ரத்து செய்து விடுவார். வாருங்கள் என்று படமுதலாளி கூப்பிட்டால், அந்த நேருவே வந்து டைரக்டர் செய்யட்டும் என்று போய்விடுவார். இதுமட்டும் எங்கோ எப்பொழுதோ நடைபெற்ற உண்மையைத் தழுவிய கற்பனை.

கலைவாணரோ இப்படிப்பட்ட அசட்டுக் கௌரவங்களை மறந்தும் எதிர்பார்க்க மாட்டார். தனக்குரிய நாற்காலியில் யாராவது படப்பிடிப்பைப் பார்க்க வந்தவர்கள் உட்கார்ந்து விட்டால் அல்லது வேறு யாரேனும் உட்கார்ந்தால் இவர் அப்படியே உலவிக் கொண்டே நிற்பார். அல்லது அழுக்காக இருக்கும் பெஞ்சிலாவது போய் உட்கார்ந்து கொள்வாரே தவிர வந்தவர்களைக் கிளப்பவும் மாட்டார், யாரையும் தவருக நினைக்கவும் மாட்டார். இவரது உள்ளம் அதைப்பற்றியெல்லாம் ஒரு விநாடிக்கு மேல் சிந்திக்காது. இவன் எப்படி நடிக்கிறுன். அந்த லைட்டை இந்தப் பக்கம் கொண்டுவந்தால் எப்படி இருக்கும்?

கேமராவை அந்தப் பக்கம் கொண்டு போனல் எப்படி இருக்கும்? வசனத்தை இன்னும் ஏதாவது மாற்றிக் கொள்ளலாமா? இன்னும் ஒருமணி நேரம்தானே இருக்கிறது? இதற்குள் எத்தனை ஷாட் எடுக்கலாம்? இப்படித்தான் ஏதாவது பயனுகச் சிந்தித்துக்கொண்டிருப்பார். உணவைப்பற்றிய எண் ணமே வராது. காப்பியோ குளிர்பானமோ ஆபீஸ் பையன் கொண்டு கொடுத்தால் அவனது திருப்திக்காக வாங்கி அருந்து வார்; அவன் எவ்வளவு நேரம் கொண்டு தராவிட்டாலும் இவரா கக் கேட்கவும் மாட்டார்.

படப்பிடிப்பு ஆரம்பமாகும் போது சில டைரக்டர்கள் ஸ்டார்ட் என்று இடிவிழுந்தது போல கர்ஜிப்பார்கள். இவரோ ஸ்டார்ட் என்று சொல்லும் அருமையிலேயே தொழில் தடை படாமல் துரிதமாக நடைபெறும்.

பையன் கிளாப்பைச் சரியாக அடிக்கவில்லை யென்ருல் 'கட்' பண்ணச் சொல்லிவிட்டு இவரே அவனிடமிருந்து கிளாப்பை வாங்கி அடிப்பார். சாதாரணமாக டைரக்டர்கள் தங்கள் கையால் கிளாப்பைத் தொடுவதே கௌரவக் குறைவு என்று எண்ணுவார்கள். அதுவும் ஒரு உபயோகப் பொருளாயிற்றே என்று நினைப்பதில்லை. கேவலம் ஐம்பது ரூபாய் சம்பளக்காரனின் கையில் இருக்க வேண்டிய பொருள்தானே என்று அதைப் பார்க்கும்போதே அலட்சியமாகப் பார்ப்பார்கள். இப்படி அவர்கள் எல்லாம் அலட்சியமாக நினைக்கும் கிளாப்பைக் கலைவாணர் மிகுந்த மதிப்புடன் தமது கையிலேயே எடுத்து வைத்துக்கொண்டு அங்கு மிங்கும் அலைவார். சில நேரம் மடியில் அதை வைத்து அதன்மேல் வெற்றிலை பாக்குத் தட்டையும் வைத்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் மற்றவர்களிடம் பேசியவாறே வெற்றிலை போடு வார். ''மணமகள்'' படப்பிடிப்பின் போது இத்தகைய காட்சியை அடிக்கடி கண்டிருக்கிறேன். எல்லோரும் ஏளனமாக நினைக்கும் கிளாப்பை இவர்மட்டும் மதிக்கிருர். ''ஏன் அண்ணே கிளாப் பிடம் இவ்வளவு பிரியம்'' என்று கேட்டேன். ''தூணிலும் துரும்

பிலும் இருக்கும் கடவுள் இதில் ஏன் இருக்கக் கூடாது' என்றூர்.

ஒரு கேந்திரத்திலிருந்து படம் எடுக்கப்பட்டவுடன் இன்ெனாரு கேந்திரத்திற்கு கேமராவையும் லைட்டுகளையும் மாற்றிக் கொண்டுபோக சுமார் இரண்டு மணி நேரமாவது ஆகும். என. எஸ். கே. அந்த இடத்தில் இருந்தால் அதே வேலை அரை மணி நேரத்தில் முடிந்துவிடும். மிகவும் சுறுசுறுப்புடன் இவரே ஒவ்வொரு சாமான்களையும் தூக்கப் போவார். கேமராவைத் தள்ளு வார். தொழிலாளிகளுடன் ஒரு கையாள்போலக்கூட மாறிவிடு வார். அது முடியும்தறுவாயில் நடிகர்களுக்குரிய வசனங்களைச் சரிபார்க்க ஆரம்பித்து விடுவார். யாராவது நண்பர்கள் வந்தால் தான் அல்லது உடல் நிலைக் கோளாருக இருந்தால்தான் நாற் காலியில் வந்து உட்காருவார்; இல்லையெனில் தறியில் ஓடும் ஓடம் போலத்தான்!

ஒரு காட்சி எடுக்கப்பட்டுக்கொண் டிருக்கும்போதே அங் குள்ளவர்கள் அதை ரசிக்கிருர்களா என்று வேலையினூடே கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பார். இப்படி இவர் கவனிக்கிருர் என் பதை யாரும் கவனிக்கவும் முடியாது. நம்முடன் பேசிக் கொண்டுதான் இருப்பார். அவரது உள்ளம் யார் எதை ரசிக்கிருர்கள் என்பதைக் கவனித்துக் கொண்டிருக்கும். அல்லது வேெறுரு புதிய கற்பனை செய்து கொண்டிருக்கும்.

படப்பிடிப்பிலே அநேக டைரக்டர்கள் தாங்கள் விரும்பும், ஒரே ஒரு சாதாரணமான சாமான் இல்லா விட்டால்கூட அன்று படப்பிடிப்பை நிறுத்தி விடுவார்கள். இவரோ வேறு ஏதாவது ஒன்றை அதற்குப் பதிலாக உபயோகித்து படப்பிடிப்பை வெற்றி கரமாக நடத்தி விடுவார். முன்பு எதிர்பார்த்திருந்ததைவிட இந்தச் சுருக்கு வழியிஞல் அதிகப் பயனையும் ஏற்படுத்தி விடு வார்.

எடுக்கப்பட்டுக்கொண்டிருக்கும் கதை எப்போதும் அவர் மனத்திரையில் ஓடிக் கொண்டே இருக்கும். எடுக்கப்பட்ட பகுதி

கள் அவ்வளவு ரசிப்பாக அமையவில்லை என்றால் அதனிடம் மட்டும் இரக்கம் காட்ட மாட்டார். தயங்காமல் வெட்டி எறிந்து விடுவார்.

பொதுவாகக் கூறப்போனால் எவரது துணையும் இல்லாமல் இயங்கிய ஒரே ஒரு தமிழ் டைரக்டர் அவர்தான்.

டைரக்டர்கள் யந்திரங்களுககு மத்தியில் வேலை செய்து செய்து தாங்களுமே ஒரு யந்திரமாகத் திகழ்கிறார்கள்! கலைவாணரோ யந்திரங்களையும் மனிதர்களாக்க முயன்று கொண்டிருந்தார் என்று கூட நகைச்சுவையாகச் சொல்லலாம் அதாவது எத்தனை யந்திரங்களுக்கு மத்தியில் அவர் நின்று வேலை செய்தாலும் அந்த மனிதரிடம் மனிதப்பண்பு இருந்துகொண்டே தான் இருக்கும்!

யாராவது ஒரு இளம் நடிகர் ''எனக்கு திருமணம் அண்ணே'' என்று கல்யாண காகிதத்துடன் வந்து நிற்பார். உடனே இவர் காகிதத்தை வாங்கிப் பார்த்து விட்டு உனக்கு இன்னிக்கு சூட்டிங் இருக்குது என்று அப்பொழுதே காரில் ஸ்டுடியோவிற்குக் கூட்டிக்கொண்டு வந்துவிடுவார். அந்த நடிகர் தனக்கு என்ன வேஷமோ என்ன பாடமோ என்று பயந்து கொண்டிருப்பார். இவரிடம் கேட்கவும் பயப்படுவார். படப்பிடிப்பு நேரம் வந்ததும் ''இந்தாப்பா, இங்கே வா. நான் சீனிலே அப்படி கேமரா பக்கமாக வருவேன். நீ இப்படியே வந்து இந்த இரண்டு வசனத்தையும் பேசிவிடு. அவ்வளவுதான் உன் வேலை'' என்பார். அந்த இளம் நடிகரோ என். எஸ். கே. யுடன் எப்படி நடிக்கப் போகிறோம் என்று பதறிக் கொண்டே இருப்பார். இரண்டு மூன்றுதடவை இவர் சொல்லிக் கொடுப்பார். படப்பிடிப்பு ஆரம்பமாகும். அந்த நடிகர் வசனத்தை சரியாகச் சொல்லாமல் உளறினாலும், இவர் அந்த நேரத்தில் சமயோசிதமாக ஏதாவது பேசி அந்தக் காட்சியையே பிரமாதமாக ஆக்கிவிடுவார். ''சரி உன் வேலை முடிஞ்சுது. காலையில் ஆபீசுக்கு வா'' என்பார். மறு நாள் காலையில் நடிகர் போவார். படத்தில் நடித்ததற்காக ஐநூறு

ரூபாய் கொடுக்கச் சொல்லி ஆபீஸில் ஏற்பாடு செய்திருப்பார், டைரக்டர் என். எஸ். கிருஷ்ணன்.

இன்னாரிடமிருந்து இவ்வளவு தொழிலைத்தான் எதிர்பார்க்க வேண்டும் என்ற அளவை, ஒரு ஆளைப் பார்த்ததுமே நிதானித்து விடுவார். அந்த நிதானம் இல்லாவிட்டால் நடனம் மட்டுமே ஆடிக் கொண்டிருந்த ஒரு பத்மினியை மணமகளில் கதாநாயகி ஆக்கி இருக்க முடியுமா? சாதாரண தங்கவேலுவை 'தங்கக் கட்டி'யாகவே ஆக்கிவிட்டாரே! மணமகள் கதையை முதன்முதலில் படித்துக் கொண்டிருக்கும் பொழுதே அதில் வரும் பாகவதர் பாகத்துக்கு நம்ம, பாலையா தவிர இதற்கு வேறு ஆளே கிடையாது' என்று சொல்லி விட்டார். அதில் கணக்கப்பிள்ளையாக ஒரு பாகம் வருகிறதே அதைப் படித்துக் கொண்டிருக்கும் பொழுதே 'இந்த வேஷத்துக்கு நம்ம (ஆள்வார்) குப்புசாமிதான்' என்று உறுதி செய்து விட்டார். இந்தமாதிரி யாரிடம் என்ன தகுதி இருக்கிறது என்பதை நிறுத்து வைத்திருப்பவர் அவர். நம்ம துரைராஜ், நம்ம தங்கவேலு, நம்ம பாலையா, நம்ம குப்புசாமி, நம்ம புளிமூட்டை, நம்ம ராமச்சந்திரன்கள், நம்ம கணேசன்கள்; அதுபோலவே நம்ம பத்மினி, நம்ம பானுமதி என்று ''நம்ம'' என்ற பதத்தை அன்புரிமையுடன் சொல்லும் டைரக்டர்கள் இன்று யாராவது இருக்கிறார்களா? சந்தித்த அடுத்த நிமிடத்திலேயே எவரிடமும் நம்ம என்று உரிமை கொண்டாடி விடுவார். என்னைப் பொறுத்தவரையில் இந்தப் பெருமையை நான் நேரிலேயே அனுபவித்தேன். ''நம்ம சுப்பு ஆறுமுகத்துக்கு கம்பெனியில் வேண்டிய வசதிகளை செய்'' என்று என்னைச் சந்தித்த அடுத்த நிமிடமே, நம்ம என்ற பதத்தை உபயோகப்படுத்தி அன்றைய மேனேஜர் தர்மராஜிடம் பேசினார். ஆண்டுக்கணக்கில் அங்கேயே இருக்கும் மேனேஜரையும் 'நம்ம மேனேஜர்' என்றார். பாரதியார், 'நோக்கும் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை' என்று சொன்னாரே, அதே நிலையில் தான் டைரக்டர் என். எஸ். கிருஷ்ணன் கலையுலகில் பழகினார்.

இன்னும் கலைவாணரிடம் எத்தனையோ சிறப்புகள்! என்ன கூறினாலும் முன்னுரையாகவே இருக்குமே தவிர, முடிவுரையாக முடிந்து விடாது.

அநேக டைரக்டர்கள் பாட்டுக்கு முதலிடம் கொடுப்பதே இல்லை. ஏதோ ஒரு மெட்டுக்குத் தகுந்ததுபோல் கவிஞரைப் பாட்டு எழுத வைத்து பிறகு அந்தப் பாட்டையும் ஆப்ரேஷன் செய்து படத்தில் இணைப்பார்கள். நமக்கு உரிமை இருக்கிறது என்ற ஒரே காரணத்துக்காக திருத்தமே தேவை யில்லாத ஒரு பாட்டுக்கும் திருத்தம் சொல்லுவார்கள். அந்தக் கர்வத்தின் பயனாக படத்திலே பரிதாபத்துக்குரிய பாடல் ஓடிக் கொண்டிருக்கும். டைரக்டர் என். எஸ். கே. யிடமோ இத்தகைய குறைபாடுகளை எவருமே காணமுடியாது. எதிரிகள் இருந்தால் அவர்களுமே காணமுடியாது. ஒரு நல்ல பாடல் கிடைத்து விட்டால் போதும், அதற்காகக் கதையையே மாற்றுவார். 'நல்ல பெண்மணி' என்ற பாடலை முதலில் உடுமலை நாராயணகவி படத்திற்காக எழுதவில்லை. தற்செயலாக எழுதிப் பாடினார். என். எஸ். கே. கேட்டதுமே, பாடலை மிகவும் பாராட்டினார். அதற்கென ஒரு காட்சி உண்டாக்கி மணமகள் படத்தில் இணைத்தார்.

இன்னும் ஒரு நிகழ்ச்சி:

"அன்பைக் கடவுள் ஆக்கினாங்க எதனாலே—உலகில்
(1) அதிக சக்தி அதற்கு இருப்பதனாலே

சாத்திரங்கள் பொய்யென்பதெதனாலே—சமயம்
(2) பாத்து ஏச்சவங்க செய்த காரணத்தாலே

சாதிமதம் இல்லையென்பது எதனாலே—நாட்டில்
(3) சமத்துவ காலமிது அதனாலே

பொதுவுடமை கேட்பது எதனாலே—மனிதன்
(4) புத்தி, முத்திப்போன ஒரே காரணத்தாலே"

இப்படி ஒரு பாடலை எழுதிக்கொண்டிருந்தேன், சுமார் ஏழு வருஷத்துக்கு முன்பு ஒரு நாள். அப்பொழுது என் அறைக்கு

என். எஸ். கே வந்தார். "என்னப்பா எழுதிக்கொண்டிருக்கிருய்" என்ருர். பாட்டை அவர் கையில் பணிவுடன் கொடுத்தேன். ஏதோ ஒரு மெட்டில் திரும்பத் திரும்பப் படித்துப் பார்த்தார். "எதுக்கு இது?" என்ருர். "ஏதாவது பத்திரிகைக்கு அனுப்பலாம் என்று எழுதுகிறேன்" என்றேன். "பத்திரிகைக்கு வேற எழுதி அனுப்பு; இது என்னிடம் இருக்கட்டும்" என்று பாட்டுக் காகிதத்தை மடித்துத் தனது சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டு போய்விட்டார்.

அவ்வளவுதான். இந்த நிகழ்ச்சியையும் நான் மறந்து விட்டேன்.

ஓரிரு மாதங்கழித்து மணமகள் படப்பிடிப்பு வேலைகள் தொடங்கின. பாடல்கள் எழுத உடுமலை நாராயணகவி வந்திருந்தார். அவரிடம் இந்தப் பாடலைக் காட்டி என்னையும் அறிமுகப் படுத்திவைத்தார். மணமகளில் அனுதை ஆசிரமத்தில் ஆசிரியராக வந்து அவரே பாடினுர். நான் எழுதியதை அப்படியே அல்ல; நாராயணகவி கொடுத்த மெருகுடனும், நாராயண கவியே எழுதிய மேலும் ஒரு சில புதிய அடிகளுடனும்!

எதற்காகவோ எப்போதோ எழுதப்பட்ட ஒன்றின் தகுதியை இப்படி முன்பே புரிந்துகொள்ளும் ஆற்றல் இன்று எந்த டைரக்டர்களுக்காவது உண்டா?

இப்போதுள்ள டைரக்டர்களோ ஒரு நல்ல பாடலைக் கண்டாலும் மதிப்பதில்லை. ஒரு ஒப்புக்காக ரசித்துவிட்டு "உங்க பாட்டு நல்லாயிருக்கு. இருந்தாலும் நம்ம கதையில் அதுக்கு இடமில்லையே" என்று செருப்பை வைத்துக்கொண்டு அதற்கேற்ற கால் தேடுகிருர்கள்; குல்லாவுக்காகத் தலை தேடுகிருர்கள்!

டைரக்டர் என். எஸ். கிருஷ்ணனிடம் இருந்த எல்லா நல்ல குணங்களுக்கும் மகுடம் வைத்தாற்போல்—எந்த டைரக்டர்

களிடமும் இல்லாத—ஒரு அரிய குணமுண்டு. அதாவது மற்ற டைரக்டர்களின் நல்ல படைப்புகளை வாயார மனதாரப் புகழுவார்; அதே நேரத்தில் அவர்கள் மோசமாகப் படைத்திருந்தாலும் அவர்களைக் கேலிபண்ணமாட்டார்.

'ஒரு நிகழ்ச்சி இன்றுதான நடந்ததுபோல் இருக்கிறது.

''ஜனக் ஜனக் பாயல் பாஜே'' என்ற படத்தைப் பார்த்து விட்டு மிகவும் மகிழ்வுடன் வீட்டிற்கு வந்தார். அவரைத் தேடி ஒரு நண்பர் வந்து காத்திருந்தார். நீங்கள் வந்த விஷயம் என்ன என்பதைக்கூடக் கேட்கவில்லை. ''டைரக்டர் என்றால் அதுக்கு அர்த்தம் சாந்தாராம்தான்'' என்று நண்பரிடம் பேச ஆரம்பித்தார். ''அடடா நானும் மைசூர் பிருந்தாவனத்தை பலதடவை நேரில் பார்த்திருக்கிறேன். அதைவிட படத்தில் ரெம்ப நல்லா எடுத்துக் காட்டிட்டாரே, சாந்தாராம்! அவர் மற்ற வர்களைப்போல கேமராவைத் தூக்கிக்கொண்டு போய்ப் பட மெடுக்கவில்லை. கேமராவுடன் பிருந்தாவனத்தில் விளையாடி இருக்கிறார். அவ்வளவுதான்! எவ்வளவு அழகாக இருக்கிறது தெரியுமா! எத்தனையோ பேர் பிருந்தாவனத்தைப் போய் படம் எடுத்துத்தான் வருகிறார்கள். பாவம், அதில் நம்ம 'பனகல் பார்க்' (Effect) பயன்தான் கிடைக்குது'' என்று மணிக்கணக்கில் சிரித்தவாறே பேசிக்கொண்டிருந்தார்.

குறைவை உணர்வார். நிறைவைப் புகழ்வார். குணத்தை மதிப்பார். கொள்கையை உயர்த்துவார். புதுமை செய்வார். அது பழமையாவதற்குள்ளேயே இன்னொரு புதுமையும் செய்து காட்டுவார். முடிந்தால் பிலீம் சுருளின் ஒவ்வொரு அடியிலும் ஒவ்வொரு புத்திமதியைச் சொல்ல ஆசைப்படுகிறேன் என்பார்.

இந்த என். எஸ். கிருஷ்ணன் ஒரு டைரக்டரா......?

அல்லது......?

# கலைவாணர்—ஒரு கல்லூரி

கலைத்திறன் ஒருவர் சொல்லிக் கொடுத்து இன்னொரு வருக்கு வருவதல்ல; எனினும், இயற்கையிலேயே பெற்றிருக்கும் கலைத்திறனைக் கட்டுப்பாட்டுடன் ஒருமுகப்படுத்தி உபயோக மாக்க ஒருவிதப் பயிற்சி தேவை. அந்தப் பயிற்சியை அள வறிந்து, இடமறிந்து, திறமறிந்து, நிலையறிந்து அளிப்பவர்களை கலைஞர்களின் ஆசிரியர்கள் என்று சொல்லலாம்.

கலை மரம் பல கிளைச் செல்வங்களை உடையது. ஒருவர் ஒன்றில் மட்டும்தான் உயர்வு பெற முடியும்—மற்றவரை உயர்த்த முடியும்—ஒருவரே பல் கிளைகளிலும் உயருகிறார், மற்றவர்களை உயர்த்துகிறார், என்றால் அவரைச் சந்தேகம் இல்லாமல் ஒரு கல்லூரி என்று சொல்லலாம். நமது நாட்டைப் பொறுத்தவரையில் கலைவாணர் ஒரு கல்லூரி. அவருக்கு முன்னும் இப்படி ஒரு கல்லூரி இல்லை. இனியும் தோன்ற முடியாது. தோன்றினாலும் அது கலைவாணர் விதைத்திருக்கும் வித்திலிருந்து வந்த வித்தையாகத்தான் இருக்கமுடியும்.

கலைவாணரிடம் அபிமானம் மிகுந்த நடிக நண்பர்கள் அவரைத் தங்கள் இனத்திற்கு மட்டுமே சொந்தம் என்கிறார்கள். அவரால் எங்களது துறைதான் ஏற்றம் பெற்றது என்று போற்று கிறார்கள். இது அபிமானத்தால் நேரும் அற்புதமான பிழை!

கலைவாணர் நடிப்பு என்னும் ஒரு துறை மேதையல்ல, அவருக்குத் தெரியாதது என்று ஒன்று உண்டுமானால், அது தமிழ் நாட்டில் இல்லாத ஒன்றாகத்தான் இருக்க முடியும்.

நாதசுரக் கலைமுதல் நாட்டியக் கலைவரையில் அவர் மேதை. அவரிடம் நெருங்கிப் பழகிய எவரும் இதை மட்டுமாவது ஒப்புக் கொள்ளாமல் இருக்க முடியாது.

அவரது வாழ்வின் ஒவ்வொரு நாளிலும் அவரை வந்து பார்த்துச் செல்பவர்களைக் கண்டாலே கலைவாணர் ஒரு நடிகர் மட்டுமல்ல என்ற உண்மையை சிரமம் இன்றிப் புரிந்து கொள்ளலாம்.

அதிகாலையில் நாதசுரச் சக்கரவர்த்தி ராஜரத்தினம் பிள்ளை வந்து பேசிவிட்டுப் போவார். அடுத்தாற்போல் மேதை தமிழ் வாணன், தாம் எழுதிய ஒரு புதுப் புத்தகத்துடனும் புன்னகையுட னும் கலைவாணரைக் காண வருவார். அடுத்தாற்போல் வசனகர்த்தா எஸ். டி. சுந்தரம் வந்து போவார். இவர் போவதற் குள்ளேயே ஓவியர் மாதவன் பேசவந்துவிடுவார். நாராயண கவி தாம் எழுதிய ஒரு புதுப்பாடலை கலைவாணரிடம் பாடிக் காட்ட இது நல்ல சந்தர்ப்பம்தானு என்று எண்ணியவாறே அங்கும் இங்கும் உலவிக் கொண்டிருப்பார். இப்பொழுதுதான் காலை உணவு உண்ண சற்று நேரம் கிடைக்கும். சாப்பிட்டுக்கொண்டு இருக்கும் இப்போதும், பால்ய வயதில் இருந்தே தன்னேடு பண் போடும் பாசத்தோடும் பழகி வரும் தமது நண்பர் வெ. நாராய ணன் அவர்களிடம் காலைத் தினசரிப் பத்திரிகைகளில் வந்த செய்திகளைப்பற்றி மிகவும் சுவாரஸ்யமாகக் கேட்பார். நாராய ணன் புதுப் புது நகைச்சுவை துணுக்குகளைச் சொல்லுவார். நாராயணன் ஒரு நாள் வந்து விட்டால், எனக்கு இரண்டு மாதங் களுக்கு விஷயங்கள் கிடைக்கின்றன-என்று நண்பரின் தகுதியை தயங்காமல் பாராட்டுவார். அதற்குள்தமது உள்ளன்பு மிக்க உதவி டைரக்டர் ராமதாஸிடம், ''ராம்தாஸ் இன்னிக்கு சூட்டிங்குக்கு உள்ள டைலாக்குகள், ஷாட்டுகள், எல்லாம் நீதான் பார்த்துக் கணும். எனக்கு வேற வேலை இருக்கு'' என்று சொல்லிவிட்டு படம் எடுப்பதற்கு வேண்டிய ஒரு சில குறிப்புகளையும் கொடுப் பார். இதற்கிடையில் நான் ஒரு பாட்டை எழுதிக் கொண்டு

போய் நிற்பேன். அதை வாங்கிப் படித்து ''இதை இன்னைக்கே ஒரு மேடையில் பாடப் போகிறேன்''.— என்பார்! இதற்குள் அவரைக் காணுவதற்காக கீழே இருக்கும் காரியாலயத்தில் ஏ. எஸ். ஏ. சாமிகளும், நீல கண்டன்களும், பந்துலுக்களும், கிருஷ்ணன்—பஞ்சு, பீம்சிங்கு களும் வந்திருப்பார்கள். கலைவாணர் இவர்களிடம் வந்து பேசு வதற்குள், நெடுஞ்செழியனும் நடராசனும் தோல்பையுடன் அவ சர அவசரமாக ஒரு சின்னக் காரில் வந்து இறங்கி ''மாநாட்டிலே எல்லோரும் உங்கள் வில்லுப்பாட்டை எதிர்பார்க்கிறார்கள், அதனால்தான் வந்திருக்கிறோம்'' என்பார்கள். இத்தனைக்கு மிடை யில் ''மே தினமலருக்''காக, ''ஜனசக்தி''யிலிருந்து கலைவாண ரிடம் கட்டுரை கேட்க ஒரு தோழர் வந்திருப்பார். இதற்குள் மதியம் ஆகிவிடும். கலைவாணர் சாப்பிட்டுவிட்டுச் சற்றுக் கண் அயர்ந்து வருவதற்குள் காரியாலயத்திலே மீண்டுமொரு கூட்டம் வந்து நிற்கும். பெரிய நாடகக் காண்ட்ராக்டர்கள் ஒரு பக்கம், நிதி நாடகம் கேட்பவர்கள் இன்னொரு பக்கம், இவர்களைமுந்தி பட முதலாளிகள் கலைவாணரை மறித்து நிற்பார்கள். இவர்களையும் விட்டுவிட்டு கலைவாணர் கல்லூரி, கலாசாலை ஆண்டு விழா நிகழ்ச்சிக்காகத் தன்னை அழைக்க வந்திருக்கும் மாணவர்களிடம் தானாக வந்து பேசுவார். மாணவர்களை அவர் அனுப்புவதற்குள் இன்னொருவர் வந்து ''உங்கள் பெயரால் ஒரு பாக்குத் தூள் நடத்தப் போகிறேன், உரிமை வேண்டும். நீங்கள் சம்மதிப்பீர்கள் என்று நம்பி விளம் பரமும் கொடுத்து விட்டேன்'' என்பார். ''பேஷ், பேஷ். நல்ல யோசனைதான். லாபத்தை மாத்திரம் கொஞ்சம் குறைவா எதிர் பாருங்க. அதையும் மீறி அதிக லாபம் வந்திட்டா பொது நிதிக் குச் செலவழித்து விடுங்கள்'' என்பார். அன்று மாலையே கிந்தனார், காந்திமகான் வில்லுப்பாட்டு நிகழ்ச்சி பச்சையப்பன் கல்லூரியில் இருக்கும். அங்கு காரில் போய்க் கொண்டிருக்கும் போதே, இறைமுடி மணி எழுதிய கதை வசன நோட் புத்தகத்தைக் கையில் எடுத்து வைத்து படித்துக் கொண்டும் பாராட்டிக் கொண் டும் இருப்பார்!

இப்படியாக நாட்டில் எத்தனை விதமான துறைகள் உண்டோ அத்தனையிலும் தொடர்பு கொண்டிருந்தார். எல்லோரிடமும் எவரும் பழகி இராத அளவுக்குப் பழகிவந்தார். எவரும் கவர முடியாத அளவுக்கு கலந்து நின்றார். இத்தகைய ஒரு சகலகலா வாணனை நடிகர் என்று மட்டும் ஒதுக்குகிறார்களே! இவரை அப்படி ஒதுக்கித் தங்கள் பக்கம் இழுக்கும் நடிகத் தோழர்கள், காந்தியை ஒரு பிரார்த்தனைக் கூட்டத்துப் பேச்சாளி என்றும், வள்ளுவரை ஒரு நெசவாளி என்றும் ஒதுக்கிப் பேசிய பாவத் திற்கு ஆளாக நேரிடலாம்.

நாட்டில் எல்லாவற்றிலும் இணைந்து நின்ற கலைவாணரை நடிப்புத் துறை கொஞ்சம் அதிகமாக உபயோகப்படுத்திக் கொண் டது என்று வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாம் அவர்கள்.

ஒரு பெரிய கல்லூரி செய்துவிட வேண்டிய சேவைகளைவிட கலைவாணர் சற்று அதிகமாகவே செய்து விட்டார்! விளக்கியும் கூறுகிறேன். கல்லூரியில் படித்த பலர் வேலைக்கு அலைவதைக் காணுகிறோம். கலைவாணரிடம் படித்த பலரை நோக்கி எல்லாச் செல்வங்களும் தானாக வந்து குவிவதையும் காணுகிறோம். இந்த தூய உண்மையை கல்லூரிகள் எல்லாம் நன்றாகப் புரிந்து கொண்டு கலைவாணரிடம் என்ன தனித்தன்மை இருந்தது என் பதை ஆராய்ந்து செயல் படுத்தினால் அதன் மூலம் நாட்டுக்கே நற்பயன் கிடைக்கும் என்று நான் கருதுகிறேன்.

தன்னைத் தேடிவந்து வேலை கேட்கும் ஒருவனிடம் கலை வாணர் தான் விரும்பிய வேலையைக் கொடுக்க மாட்டார். வந்த வருக்கு எந்த வேலையில் நாட்டமோ அந்த வேலையில் அவரை வைத்து வளர்ப்பார். தன் கம்பெனியில் நடிகர்கள் அதிகமாக இருந்த போதிலும் நடிகனாக வரவேண்டுமென்று விரும்புகிறவர் களை நடிகர்களுடனேயே சேர்த்து விடுவார். கதைவசனம், பாடல் எழுத தன்னிடம் ஆட்கள் இருந்த போதிலும் புதிதாக எழுது வேன் என்று ஒருவன் வந்தால் அவனையும் அதில்தான் வளர விடுவார். ஒருவன் ஏதாவதொன்றை விரும்புகிறான் என்றால்

அதில் அவன் அவனையறியாமலேயே ஒருவித திறமை பெற்றிருக்கிருன் என்றுதான் கருதுவார்.

இந்த ஒரே ஒரு அருமையான கல்லூரியும் இடிந்து விட்டதே!

மற்றக் கல்லூரிகளில் மாணவர்கள் விரும்பும் துறையில் அவர்களுக்கு இடம் கிடைக்காவிட்டால் அவர்களை வேறு ஏதாவது துறை காலியாக இருந்தால் அங்கே கொண்டுபோய்த் தள்ளி அடைத்து விடுகிருர்கள். அங்கே மூச்சுத் திணறும் வண்ணம் படித்து விட்டு வெளியே வரும் மாணவர்களில் பலர், கலைவாணர் ஒரு படத்திற்குப் பெயர் வைத்திருந்தாரே ''படித்த முட்டாள்'' என்று, அந்தப் பெயருடன் அலைய நேரிடுகிறது.

கலையுலகிலே நீ இதற்கு முன்னே எங்கிருந்தாய் என்று ஒரு கலைஞனை ஒரு கலைக் கூடத்தார் விசாரிக்கும்போது அவன் இதற்கு முன்னே என். எஸ். கே. யில் இருந்தேன் என்று சொன்ஞல், கேள்வி கேட்டவர் அதிர்ச்சி கலந்த மகிழ்ச்சி அடைவார். கலைஞன் எதிர்பார்த்ததை விட அதிக மதிப்பில், அதிக சம்பளத்தில், அதிகத் தகுதியில் அப்பொழுதே வேலை கிடைத்து விடும். இதன் உட்பொருள் என்ன? கலைவாணரின் கலைக் கூடமான என். எஸ். கே. பிலிம்ஸில் ஒருவன் இருந்திருக்கிருன் என்ருல் அவன் நிச்சயமாக எதிலும் கெட்டிக்காரனுகத்தான் இருப்பான். அவர் அப்படித்தான் வளர்த்து வைத்திருப்பார் என்ற புகழான எண்ணம் இன்றும் கலையுலகில் எங்கும் உலவக் காணலாம். இந்தப் புகழ் ஜெமினிக்கும், ஏ. வி. எம். க்கும் வாஹினிக்கும் பொருளால் மட்டுமே கிடைத்திருக்கிறதே அதைப்போன்றதல்ல; உயிருள்ள புகழ். உண்மையான புகழ். கலைவாணரின் உழைப்பால் வந்தபுகழ்.

என். எஸ். கே. யின் கலைக்கூடத்திலே இருக்கும் அனைவரையும் அஷ்டாவதானிகள் என்ருலும் பொருந்தும். நடிகரை திடீரென மியூசிக் டைரக்டர் ஆக்கிவிடுவார். மியூசிக் டைரக்டரை

நடிகராக்கி விடுவார். ஒரு டிரைவர் நடிகராக வேண்டியது வரும். நடிகரும் டிரைவராக வேண்டியது வரும். கவிஞனை நடிகனுக்குவார். நடிகனைக் கவிஞன் ஆக்குவார். காரிய தரிசி போன்கேட்டுப் பதில் சொல்ல வேண்டியது வரும். போன் கேட்டுப் பதில் சொல்பவனும் காரியதரிசியாக வேண்டிவரும். சும்மா நின்றுகொண்டிருந்த ஒரு ஆபீஸ் பையனும் நாடக ஒத் திகை நடத்திச் சரிபார்ப்பான். அந்த வேலைக்குரியவன் ஆபீஸ் வேலையைப் பார்க்கப் போய்விடுவான். சாதாரண ஒரு ஆள் அங்கே மேதாவியாகி விடலாம் - மேதாவியும் சாதாரணமாகிக் கொள்ளலாம். இன்னும் யாரெல்லாமோ எப்படியெல்லாமோ ஆகி ஒருவர் தொழிலை இன்னொருவர் செய்ய நேரிட்டபோதி லும் அங்கே ஒரு அதிசயம் தெரியுமா? எல்லோரும் ஓர்குலம், எல்லோரும் ஓர் இனம், எல்லோரும் ஓர் விலை என்ற நிலை யிலேயே பழகுவார்கள். ஏறத்தாழ அங்குள்ள எல்லோரையுமே ஒரு 'குட்டி என். எஸ். கே.' என்று சொன்னாலும் பொருந்தும். அவரது தாராள மனத்தின சாயலாவது அங்குள்ளவர்களிடம் இருக்கும்; இருந்தாக வேண்டும். ஒருவருக்கொருவர் அண்ணே அண்ணே என்றுதான் அழைப்பார்கள்; அவரையும் அப்படித் தான் அழைப்பார்கள். அந்தக் கலைமன்னனின் சபையைப் பொறுத்தவரையில் ஒருவரையொருவர் தம்பியாகக் கருதும் முறையே கிடையாது. ஒருவருக்கொருவர் அண்ணன்தான்! சின்னவர் பெரியவர் என்ற சின்னத்தனமான பேதமில்லாத உன் னதமான கலைக்கூடம் அது. விதிவிலக்கான நபர்களும் அங்கே உண்டு. அவர்களைப்பற்றி நாம் ஏன் கவலைப்படவேண்டும். அவர் களின் பரம்பரையைத்தான் சாந்திநிகேதனம், வார்தா ஆசிரமங் களிலேயே காணலாமே!

கலைவாணர்......?

நடிகர்களுக்கு நடிப்பு சொல்லிக் கொடுத்தார். கவிஞர்களுக் குப் பாடல் எழுதும் முறையைச் சுட்டிக் காட்டினார். வசனகர்த் தாக்களுக்கு விசனம் வராத வண்ணம் வசனமெழுதச் சொல்லிக்

கொடுத்தார். ஓவியர்களுக்கும் சில நேரங்களில் இவர் ஆசான். படத்தில் காட்சிகளை எப்படி அமைக்க வேண்டும் என்ற முறையை பற்பல டைரக்டர்களுக்கும் தமது செயல்களின் மூல மாகவே சொல்லிவந்தார். கதாநாயகர்கள் எல்லாம் இன்று கிரா மிய நடனம் ஆடுகின்றார்களே அதுகூட கலைவாணர் நல்லதம்பி யில் ஆடிக்காட்டியதுதான். நல்லதம்பி, மணமகள், பணம் போன்ற படங்களை எடுத்துக்காட்டி இப்படிப் படங்களை எடுங்கள் என்று படமுதலாளிகளுக்குச் சொல்லாமல் சொல்லிவந்தார்.

எல்லாவற்றையும்விட முக்கியமாக சீர்த்திருத்தவாதிகள் முகத்தைக் கடுகடுவென வைத்துக்கொண்டு, ஏதோ மிலிட்டரி ஆபீஸர்களைப்போல நடமாடக் கூடாது, சிரித்த முகத்துடனும் தாராள மனத்துடனும் வாழுங்கள், வாழுங்கள் என்று 49 வயது வரை சொல்லி வந்தார். அதுதான் மெய்யான புகழ் என்று அதற்கு அவரே சாட்சியாக நடமாடிக் கொண்டிருந்தார்—யாருக்கும் புரியவில்லை—கடைசியில் செத்தே காட்டிவிட்டார்.

ஏடுகளிலும் காணமுடியாத புதுமையான பொதுவாழ்க்கை முறையை நமக்குச் சொல்லித் தந்துகொண்டிருந்த என். எஸ். கிருஷ்ணனை ஒரு கல்லூரி என்பதன்மூலம் கல்லூரிகளை நான் பெருமைப் படுத்துகிறேன்.

கல்லூரியில் படித்த பட்டதாரிகள் இந்த நாட்டுக்குச் செய்த சேவைகளைவிட, ஒரு என். எஸ். கிருஷ்ணன் செய்தது சற்று அதிகம்தான்!

# கலைவாணர்—ஒரு குழந்தை

உருவிலே, திருவிலே, பொருளிலே, புகழிலே கலைவாணர் ஒரு பெரியவர் என்ற போதிலும்கூட உண்மையிலே அவர் ஒரு குழந்தைதான்; குழந்தையுள்ளம் பெற்றவர்தான். ஏற்றங்கள் எத்தனை வந்தபோதிலும் அவர் இந்த நிலையிலிருந்து மாறவும் நினைக்கவில்லை. மாறவுமில்லை. குழந்தையாகவே வளர்ந்தார். குழந்தையாகவே வாழ்ந்தார். குழந்தையாகவே போயும் விட்டார்.

கலைவாணரைப் பெற்றெடுத்த தாயார் அடைந்த பாக்கியத்தை நாம், நாட்டுமக்கள், ஒவ்வொருவரும் பெற்றோம். நம்மையெல்லாம் தாயாகக் கருதித்தான் கலைவாணர் கூடிக் குலவினர்; பாடி ஆடினர். ஒரு குழந்தை அதன் வீட்டு முற்றத்தில் எத்தனை உரிமையுடன் ஆடிப்பாடி விளையாடுமோ அத்தனை உரிமையுடனே கலைவாணர் உலகத்தோடு விளையாடிக்கொண்டே இருந்தார்.

அவர் செய்த ஒவ்வொரு நல்ல காரியத்துக்கும் அவரிடம் மூலதனமாக இருந்தது இந்தக் குழந்தையுள்ளம்தான்.

காலையில் ஒருவனை வெறுப்புடன் பேசுவதுபோல ஒரு மாதிரியாகப் பேசுவார். மதியத்தில் முன்பு யாரைத் தாக்கிப் பேசினரோ அவரையே மணிக்கணக்கில் பாராட்டிக் கொண்டிருப்பார். சாயங்காலம் மீண்டுமொருமுறை அவனை வெறுத்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. நாமாக குழந்தைகளிடம் பொம்மையைக் கொடுத்தால் வேண்டாம் என்று தூர வீசும். அடுத்த வினாடியே நகர்ந்து நகர்ந்து போய் அந்தப் பொம்மையை எடுத்து விளையாடும். அப்பொழுது நாம் கேட்டாலும் தராது. பிடுங்கினாலும்

அழும். இந்த அழகான குழந்தை மனநிலை கடைசிவரை கலை வாணரிடம் இருந்தது.

என்னை ஒருநாள் அவசரமாகக் கூப்பிட்டனுப்பினார். மிகவும் அவசரமாக மாடியில் அவரது அறைக்குள் சென்றேன். அங்கே அவர் என்ன செய்துகொண்டிருந்தார் தெரியுமா? பென்சில் சீவுவதற்காக ஒரு சின்ன யந்திரம் எங்கிருந்தோ வாங்கி வந்திருந் தார். அதில்வைத்து மிகுந்த அக்கறையுடன் பென்சிலை சீவிக் கொண்டிருந்தார். ''இங்கே கவனி. பென்சிலை யந்திரம் எவ்வளவு அழகா சீவுது பார்'' என்று யந்திரத்தைப்பற்றி ஏதோ ரெம்ப அவசியமான ஒன்றைப்பற்றிப் பேசுவதுபோலப் பேசினார். ''உன் பென்சிலைக் கொடு சீவித்தருகிறேன்'' என்று கேட்டார். ''பென் சில் கொண்டுவரலை அண்ணே'' என்றேன். உடனே அவரது மேஜையில் இருந்த ஒரு புதுப் பென்சிலை எடுத்து யந்திரத்தில் கொடுத்து நன்றாக சீவி ''இந்தா உனக்கு வச்சுக்கோ'' என்று தந்தார். முக்கியமான விஷயமாக என்னை அவசரமாகக் கூப்பிட்டு அனுப்பியது மறந்துபோய் விட்டதோ என்னவோ, அவசரமாகப் பென்சில் சீவித்தருகிறார். இன்னொருமுறை அவரைப் பார்த்துப் பேசுவதற்காக கீழே வராந்தாவில் உள்ள நாற்காலியில் நாட்டின் ஜீவநாடியான ஜீவானந்தம் வந்து உட்கார்ந்திருந்தார். பின்பக்கம் ஆபீஸில் போய்ப் பார்த்தால் இரண்டு மூன்று படமுதலாளிகளும் ஒரு பெரிய பத்திரிகை ஆசிரியரும் வந்திருந்தார்கள். ஸ்ரீ எஸ். எஸ். வாசனிடமிருந்து கலைவாணரைத் தேடிப் போன் வந்தது. ஆபீஸ் பையன் மாடிக்குச் சொல்ல ஓடினான். மேலே அவர் என்ன செய்துகொண்டிருந்தார் தெரியுமா? சுமார் மூன்று நான்கு வயதுள்ள ஒரு குழந்தையின் பக்கத்தில் அதைப்போல இவரும் குந்தியிருந்து கொண்டு, சாவி கொடுத்தால் ஓடுமே சின்ன விளையாட்டு மோட்டார், அதற்கு நன்றாக சாவிகொடுத்து ஓடவிட்டு வேடிக்கை பார்த்துக்கொண்டு இருந்தார். ஆபீஸ் பையன் வந்து கூப்பிட்டான். அவனை நிமிர்ந்துகூடப் பார்க்காமல் அவன் சொல்வதைக் கேட்டுக் கொண்டும் மோட்டாரை ஓட்டிக்

கொண்டுமிருந்தார். அதில் சின்ன ரிப்பேர் வந்துவிட்டது. அதை யெடுத்து அக்கறையுடனும் அவசரத்துடனும் சரிசெய்தவாறே ''நீ போ, இதோ வந்துவிட்டேன்'' என்று ஆபீஸ் பையனை அனுப்பினார்.

இன்னொரு அழகான நிகழ்ச்சி.

ஒரு சுதந்திரதின விழா. ரேடியோவில் டில்லி அஞ்சல் ''ஜனகனமன'' முழங்கிக் கொண்டிருந்தது. எல்லா மந்திரிகளும் அனுப்பிய சுதந்திரதினச் செய்திகள் பத்திரிகையில், பாவம் விளம்பரங்களைப் போடவிடாமல், எல்லா இடங்களையும் ஆக்ரமித்துக் கொண்டிருந்தன. ஊர்வலங்களின் ஆரவாரமும் கேட்டுக் கொண்டிருந்தது. அன்று கலைவாணரைப் பார்க்கவும் யாரெல்லாமோ பெரிய ஆள்கள் எல்லாம் காரியாலயத்தில் காத்திருந்தார்கள். நானும் கம்பெனிமியூசிக் டைரக்டரும் அன்று ரேடியோவில் பாடப்பட வேண்டிய ஒரு பாட்டுடன் மாடிக்குப்போனோம். அங்கே கலைவாணர் என்ன செய்து கொண்டிருந்தார் தெரியுமா? சுற்றிலும் நாலைந்து சின்னப் பிள்ளைகளை உட்காரவைத்துக் கொண்டு ஒரு கயிற்றில், காகிதத்தால் ஆன தேசியக் கொடிகளை வரிசையாகத் தோரணம்போல் கட்டித் தொங்கவிடுவதற்காக, கொடிகளை கயிற்றில் ஒட்டிக்கொண்டிருந்தார். பிரதம மந்திரி நேரு டில்லி செங்கோட்டையில் கொடியேற்றிக் கொண்டிருந்த நேரத்தில் கலைவாணர் சூழவும் வருங்காலப் பிரஜைகளை வைத்துக் கொண்டு காகிதக் கொடிகளைக் கட்டிக்கொண்டிருந்தார். கலைவாணர் நினைத்தால் அன்று டில்லியிலோ, சென்னையிலோ நடக்கும் எந்தப் பெரிய நிகழ்ச்சியிலும் கலந்துகொள்ள முடியும். அவருக்கு அதிலெல்லாம் பிரியம் இல்லை. குழந்தைகளுக்குக் கொடி கட்டிக் கொடுக்கிறார். சின்னஞ் சிறு கிளிகளைச், செல்வக்களஞ்சியங்களைத் தன்னைச் சூழவும் வைத்துக்கொண்டு பாரதியார் ''ஓடி விளையாடு பாப்பா'' என்று அவரும் பாப்பாவாகி ஓடிவிளையாடிப் பாடினாரே அந்த அழகு நிகழ்ச்சியுடன், கலைவாணரின் கொடி கட்டும் நிகழ்ச்சியையும் ஒப்பு நோக்குக.

அவருக்கு எதிரேயிருந்து யாராவது பேசிக்கொண்டிருக்கும் போது பேச்சுப் பிடித்தால் மிகவும் ரசிப்பார். பிடிக்கவில்லையானு லும் வெறுப்பை வெளியே காட்டிக்கொள்ள மாட்டார். "ஊம் .. ஊம்...அப்படியா..." என்ற இடைமொழியுடன் கேட்டுக் கொண்டே இருப்பார். ஆனுல் அவர் கை, பக்கத்தில் உள்ள ஒரு காகிதத்தை எடுத்து "பே"டில் வைத்து ஏதாவது ஒரு படம் போட்டுக்கொண்டிருக்கும். ஒருநாள் பணத்தையே பிரதானமாக நினைக்கும் வட்டியால் ஆன செட்டி ஒருவர் அவருக்குப்பிடிக்காத விஷயங்களைப் பேசிக்கொண்டே இருந்தார். இவர் "ஊம்...ஊம்" என்று கேட்டுக்கொண்டே இருந்தார். "பே"டில் உள்ள ஒரு காகிதத்தில் ஒரு படமும் போட்டுவிட்டார். பேடு இவர் மடியில் இருப்பதால் அதில் இவர்போடும் படம் எதிராளிக்குத் தெரி யாது. வந்திருந்தவர் போனதும் இந்தா, படத்தைப்பாரு என்று என்னிடம் காட்டினுர். அது படம் எடுத்தாடும் ஒரு நல்ல பாம் பின் படம். இன்னொரு தடவை, நம்பிய எவருக்கும் நாமம்போடும் ஒருவன்வந்து அவருக்குப் பிடிக்காத விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்தான். இவர் "ஊம்......ஊம்" என்று கேட்டுக் கொண்டே மடியில் உள்ளபேடில் ஒரு படம் போட்டார். வந்தவன் போய்விட்டான். அவன் போனதும் இவர் எழுந்து குளிக்கப்போய் விட்டார். பேடில் இவனுக்கு என்னபடம் வரைந்திருக்கிருர் என்று பார்த்தேன்; அது ஒரு நரியின் படம்.

கலைவாணருக்கு தமிழ்வாணனிடம் மிகவும் பிரியம். அவர் அன்பாகப் பழகுவதைப்பற்றி ஒரு நாள் என்னிடம் பேசிக் கொண்டே மடியில் இருந்த 'பே'டில் ஒரு படம் போட்டார். அது ஒரு சாதுவான ஆட்டுக்குட்டியின் படம்.

காந்தி வில்லுப்பாட்டு தயார் செய்து கொண்டு இருக்கும் போது இவர் வெகு நேரமாக பேடில் ஏதோ கிறுக்கிக்கொண் டிருந்தார். என்னபடம் என்று எட்டிப்பார்த்தேன். அது ஒரு பசு வின் படம்.

தன்னைப்பற்றி—தான் வாழ்வில் எப்படிப் பழக நினைக்கிருர் என்பதைப்பற்றி—அவரே ஒரு நாள் பேசிக்கொண்டிருந்தார்.

இந்த நேரத்தில் என்ன படம் போட்டிருக்கிறுர் என்று மிகவும் சுவாரஸ்யமாக எட்டிப்பார்த்தேன். நோக்கமறிந்து 'பே'டையே என் கையில் தந்துவிட்டார். ஒரு தொட்டில் பருவத்துக் குழந்தையின் படம்.

உலகத்தில் விளேயாட்டை வைத்துக்கொள்ளாமல், விளே யாட்டிலேயே உலகத்தை வைத்துக்கொண்டிருந்த இத்தகைய கலேவாணர் ஒரு குழந்தை என்பதை யாராவது மறுக்க முடியுமா? எனக்கு வாய்ப்பும் வசதியும் கிட்டுமானுல் இதே தலேப்பில் மட்டுமே ஒரு பெரிய புத்தகம் எழுத நினேத்திருக்கிறேன். அவர் அவ்வளவு ''பெரிய'' குழந்தை.

இத்தனே ஆண்டு காலமாக மதுரம் அம்மா அவர்களும் அவரை ஒரு குழந்தையாகக் கருதித்தான் வளர்த்தார்கள். 'எம்மா'—'எப்பா'—'என்ஞ' என்று அந்த அம்மா அவரைக் கூப்பிடும்போது, தூய குழந்தையிடம் தூய தாய் ஒருத்தி கொஞ்சும் தூய்மையான தாய்மையை அங்கு தரிசிக்கலாம்.

கலேவாணர் என்னும் குழந்தைக்கு வாழ்விலே உள்ள வளேவு நெளிவுகள் தெரியாது. பகைவர் தெரியாது, நண்பர் தெரியாது, காய் தெரியாது, பழம் தெரியாது, தீமை தெரியாது, நன்மை தெரியாது, இரவு பகல், கோடை குளிர் எதுவுமே தெரியாது என்று இ ல க் கி ய ம ா க ச் சொல்ல விரும்புகிறேன். ஏன் என்ருல் அவரது குழந்தை யுள்ளம், ராமலிங்க அடிகளார், காந்தி, ஏசு, பு த் த ர் போன்ற புனிதர்களின் உள்ளத்தைப்போல, எப்பொழுதும் ''எல்லா உயிர்களும் இன்புற்று வாழவேண்டும்'' என்ற சுருதி யிலேயே நின்று பாடிக்கொண்டிருந்தது; இந்த மாதிரிப் பெரியவர்களே யெல்லாம், பேதாபேதத்திற்கு ஏற்ற நன்மை தீமைகளேப் பகிர்ந்தளிக்கும் முன்னே, குழந்தையுள்ளம் பெரிய சமநிலேக்குக் கூட்டிக்கொண்டு போய்விடும். இப்படிப்பட்ட என். எஸ். கிருஷ்ணன் என்னும் ஒரு அன்பு வெள்ளத்தை அணே போட்டு கலே நிலத்திற்கெல்லாம் பாய்ச்சிக் கலேப்பயிர் வளர்க்க

துணை புரிந்த பெருமைக்காக மட்டும்மதுரம் அம்மையாருக்கு இந்த நாடு ஒவ்வொரு நாளும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறது. கலைவாணர் வாழ்க, கலைவாணரின் புகழ் வாழ்க என்று யார் வாழ்த்தினுலும் சரி, அதன் பலனில் கால் பங்காவது தானுக மதுரம் அம்மையாருக்கும் வந்து சேர்ந்துவிடும். மதுரம் அம்மை யாரைச் சத்தியம் கைவிடாது—காப்பாற்றும் — கலைவாணர் சத்தியத்தின் உருவிலேயே துணை நிற்கிருர்.

இன்று கலையுலகில் தங்களைப் பெரிதாகக் கருதிக்கொண் டிருக்கும் அநேகர் காட்டிலே வேட்டைககுச் சென்று கரடி, சிங்கம், புலிகளைக் கொல்லுகிருர்கள். அவர்களுடன் கலைவாண ரின் வேட்டையைப்பற்றியும் சற்று சொல்கிறேன் கவனியுங்கள்.

கலைவாணரிடமும் ஒரு சின்னத் துப்பாக்கி உண்டு. அடிக்கடி வெத்து வேட்டுகளைப் போட்டு உயிரற்ற பொருள்களை அடித்து வீழ்த்தி விளையாடுவார். இப்படிப்பட்ட துப்பாக்கியை ஒரு முறை குற்ருலத்துக்குக் கொண்டு சென்ருர். சுமார் ஒன்றரை ஆண்டுகளுக்கு முன்பிருக்கலாம்.

அப்போது நெல்லைப் பொருட்காட்சியில் நாடகம் நடத்திக் கொண்டிருந்த அவ்வை டி. கே. சண்முகம் அவர்கள் குற்ருலத் தில் அண்ணன் தங்கியிருக்கிருர் என்று கேள்விப்பட்டதும் காண வந்தார். அப்போது கலைக் குழந்தை என்ன செய்துகொண் டிருந்தது தெரியுமா? துப்பாக்கியில் வெத்து வேட்டுகளைப் போட்டு தங்கியிருக்கும் வீட்டைச் சுற்றியுள்ள மாமரங்களில் சரியாகப் பழுக்காமல் நோய்ந்து தொங்குமே அந்த மாங்காய் களுக்குக் குறிவைத்து அடித்துக்கொண்டிருந்தார். சண்முகத் தைக் கண்டதும் துப்பாக்கியைக் கொடுத்து '' சண்முகம்! அதோ தொங்குதே நோஞ்ச மாங்காய் அதை அடித்துக் கீழே தள்ளு பார்க்கலாம்'' என்ருர். சண்முகம் நிமிடக் கணக்காகக் குறிபார்த்துச் சுட்டார். குறி பிரமாதமாகத் தவறியது. இரண்டு மூன்று முறை சுட்டார். அப்பொழுதும் தவறியது. உடனே கலைவாணர் துப்பாக்கியை வாங்கி இதோ நான் சுடுகிறேன் பார்

என்று ஒரே விநாடியில் குறிபார்த்து அடித்தார். மாங்காயைக் காணோம். அடிபட்டுக் கீழே விழுந்துவிட்டது. கொஞ்ச நேரம் அண்ணனுடன் பேசி இருந்துவிட்டு ஐந்தருவிக்குப் போய்விட்டார். போன பிறகு கலைவாணர் துப்பாக்கி நிகழ்ச்சியைப்பற்றியே திரும்பத் திரும்பப் பேசிக்கொண்டிருந்தார். அப்பொழுது சிரித்துக்கொண்டே ''சண்முகம் பெரிய வேட்டைக்காரன். சாதாரண மான ஆள் அல்ல. இப்படிச் சின்ன மாங்காயை எல்லாம் குறி பார்த்துச் சுடமாட்டான். இதெல்லாம் அவனுக்கு அற்ப சமாசாரம். பெரிய பங்களா, பெரிய மலை, பெரிய கோபுரம் இவைகளைக் குறிபார்த்து அடிச்சுடு என்று சொனனால் போதும் சுட்டுத்தள்ளி விடுவான்'' என்று முத்தமிழ் கலா வித்வரத்தினத்துடன், விமர்சனத்தால் விளையாடினார்.

ஐந்தருவி! அங்குள்ள ஐந்து அருவியிலும் ஓடி ஓடி உல்லாச மாக குளித்துக்கொண்டே இருப்பார். தன் மேல் விழுந்து கொண்டிருக்கும் அருவி நீரை அளைவார். சின்னப் பிள்ளைகளைப் போல அருவியுடன் விளையாடிக் கொண்டிருப்பார். ஒரு முறை அவருடன் வந்து குளித்துக்கொண்டிருந்த ஒரு நண்பரை எதிரே இருக்கும் சிறிய தடாகத்துக்குள் தள்ளினார். இன்னொரு பெரிய ஆளும் அவருடன் குளித்துக்கொண்டிருந்தார் அவரையும் பிடித்து இழுத்து வந்து தடாகத்துக்குள் தள்ளினார். தடாகத்தில் தள்ளப் பட்டவர்களை நோக்கி குளிர் பொறுக்கமுடியாமல் உடல் நடுங்கிக் கொண்டிருந்த நான் சிரித்தேன். ''நீ ஒருத்தன் பாக்கி இருக்கிறயா? போ. புனல் ஆடு'' என்று சொல்லியவாறே உள்ளே பிடித்துத் தள்ளிவிட்டார். அடுத்த விநாடியில் அவரும் புனல் ஆடுவதற்காக உள்ளே குதித்தார். மீண்டும் அருவிக்குப் போய் குளித்தார். வெள்ளப் பெருக்கைக் கண்டுவிட்டால் அவர் மேலும் சின்னக் குழந்தையாகிவிடுவார். இப்படியே அங்கு ஒரு மணி நேரத்திற்கு மேலாகக் குளித்துவிட்டு தங்குமிடம் வருவார். சாப்பிட்டு கொஞ்ச நேரம் பேசிப் படுத்திருந்துவிட்டு மறுபடியும் காருக்குள் முந்தி வந்து உட்கார்ந்துகொண்டு எல்லோரையும்

குளிக்கக் கூப்பிட்டுத் தொந்தரவு படுத்துவார். இப்படிப்பட்ட கலைவாணரை ஒரு குழந்தை என்று நான் மட்டுமல்ல, நாடே சொல்லட்டும், நாளெல்லாம் சொல்லட்டும், என்று ஆசைப்படு கிறேன்.

இன்னும் எவ்வளவோ இருக்கின்றன. வீட்டிலே உள்ளவர் கள் நவராத்திரி கொலு நடத்துவார்கள். அங்கிருக்கும் பொம்மை களை குழந்தைகளோடு குழந்தையாக நின்றுகொண்டு ரசிப்பார்.

ஒரு முறை இரவில் ஒரு மாநாட்டுத் தலைமைச் சொற்பொழி வுக்காக குறிப்புகளைத் தயார் செய்து கொண்டிருந்தார். அப் பொழுது வானத்தில் ஏரோப்பிளேன் போகும் சப்தம் கேட்டது. அன்று மட்டும் ஏனோ புதுவிதமாகக் கேட்டது. உடனே பேப்பர் பென்சிலைக் கீழே போட்டுவிட்டு கூரைக்கு வெளியே வந்து ஏரோப்பிளேனைப் பார்த்துவிட்டு உள்ளே வந்து "நல்ல சிவப்பு லைட்டுப் போட்டுவிட்டு குஷியாப் போருன்" என்று சொல்லிய வாறே வந்து உட்கார்ந்து வேலையைத் தொடர்ந்தார். பெரிய மாநாட்டுக்கு பேச்சு குறிப்பு தயார் செய்துகொண்டிருந்த கலைவாணர் புதுவிதமாக ஏரோப்பிளேன் சப்தம் கேட்டதும், அது என்ன? என்று பார்க்க ஓடுகிருர். ஆம், அவர் குழந்தை, குழந்தை குழந்தையே!

குழந்தைப் பருவத்தை, ஓடுகிற பாம்பைப் பிடிக்கும் பருவம் என்பார்களே அது உண்மைதான்.

"ஒரு குழந்தை, பாம்புடன் விளையாடியது; பாம்பு கடித்துக் கொன்றுவிட்டது." கலைவாணரின் மறைவுபற்றி உண்மையாளர் கள் இப்படித்தான் சொல்ல முடியும்.

எனினும்......?

வெற்றி பாம்புக்கா? குழந்தைக்கா......?

இதற்குப் பதில் பொறுத்துத்தான் சொல்ல முடியும்!

# கலைவாணர்—ஒரு பொதுவுடமை

சென்னைக் கடற்கரையும், குற்றாலமும், பொருனை, காவேரி நதிகளும் இந்த நாட்டிற்குப் பொதுவுடமையாக இருக்கும்வரை கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனும் பொதுவுடமையாகத்தான் இருப்பார்; அப்படித்தான் இருக்கவும் வேண்டும். அவர் ஒரு தனிப்பட்ட சங்கத்துக்காகவோ, தனிப்பட்ட கட்சிக்காகவோ, தனிப்பட்ட நபருக்காகவோ வாழவில்லை; அவருக்காக கூட வாழ்ந்து கொள்ளவில்லை.

இந்த நாடு கலைவாணர் கலைவாணருக்கே சொந்த மில்லை என்று சொல்லுமளவுக்கு அவரிடம் உரிமை கொண்டாடி வந்திருக்கிறது. அவர் நோய்ப் படுக்கையில் இருக்கும் போதும் டாக்டரின் சட்டங்களையும் புறக்கணித்துவிட்டு அவரைச் சூழ்ந்திருந்த உற்றார் உறவினரையும் இடித்துத்தள்ளிக்கொண்டு மருத்துவ மனைக்குள் மக்கள் சாரி சாரியாகவந்து அவரது நலம் விசாரித்தார்கள். காவலுக்காக நின்ற போலீஸ்காரர்கள்கூட மற்ற இடங்களில் காவல் நின்றதுபோல நிற்கவில்லை. என். எஸ். கிருஷ்ணனை அடிக்கடி பார்த்துக்கொள்ள முடிகிறதே என்ற எண்ணத்தை மட்டுமே பெரிய சம்பளமாகக் கருதி அங்கு நின்றார்கள். கலைவாணரின் தாயார் தம் செல்வத்தை ஓடோடி துடிப்புடன் பார்க்க வந்துகொண்டிருந்தார்கள். வயதான அவர்களையும் தள்ளிக்கொண்டு கலைவாணரின் நிலையை அறிய மக்கள் உள்ளே வந்தார்கள். தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் ஒரு தாயிடமும் போட்டி போட்டு உரிமை கொண்டாடிய நிகழ்ச்சி,

என். எஸ். கிருஷ்ணன் ஆஸ்பத்திரியில் இருந்தபோதுதான் நடைபெற்றது என்று கூறலாம்.

இப்படிப்பட்ட தூயபுகழையும் அன்பையும் 'கலைவாணர் எப்படிச் சம்பாதித்துக் கொண்டார் என்பதை விளக்கி எழுதினல் அது ஈகையின் வரலாற்றைப்பற்றி எழுதிய ஒரு நல்ல காவியம் ஆகிவிடும்.

சென்னையில் என். எஸ். கிருஷ்ணன் இருக்கிறார், நமக்கு உதவி செய்வார் என்ற நம்பிக்கையுடன் தமிழ் நாட்டின் ஒவ்வொரு ஊரிலிருந்தும் தினமும் நாலைந்து ஏழைக் குடும்பங்கள் வந்துகொண்டே இருப்பதுண்டு. கூர்க்கா காவல் இல்லாத அவரது வீட்டுக்குள் ஏதோ சொந்த வீட்டுக்குள் புகும் உணர்ச்சியுடன் புகுவார்கள். கூட்டம் அதிகம் ஆகிறதே என்று வாசலில் நிற்கும் கம்பெனி ஆட்கள் ஏதாவது தடுப்பு மொழி பேச ஏற்பட்டால் கம்பெனி ஆள்களிடமே வந்தவர்கள் மிகவும் கோபிப்பார்கள். கம்பெனி ஆள்களும் கோபிக்க நேரிடும். பிறகு சண்டைதான். இந்த நேரத்தில் என். எஸ். கே. நம்மை எங்கிருந்தாவது பார்த்துவிட மாட்டாரா என்று வந்திருந்தவர்கள் சத்தம் போடுவார்கள் துடிப்பார்கள். இந்த சத்தத்தை அவர் கேட்டுவிட்டால் என்ன வேலை செய்துகொண்டிருந்தாலும் அதை அப்படியே போட்டுவிட்டு எழுந்து வந்து வந்தவர்களின் குறை நீக்கி அனுப்புவார்.

என்னைக் கேட்டால் எதுவுமே இல்லாமல் நிர்க்கதியாக உலவும் இந்த நாட்டு ஏழைகளுக்குத்தான் என். எஸ். கே. மறைந்ததில் முதல் நஷ்டம் என்பேன். பாரதியும் காந்தியும் தென்றலைப்போல திசையெலாம் உலாவி ஏழைக்கும் இருப்பவர்க்கும் எப்படி ஒரு பொது இன்பம் தந்தார்களோ அதே நிலையில்தான் கலைவாணரும் நாட்டிலே உலவி வந்தார். இது மிகப் பெரிய நிலை.

கலைவாணரின் உள்ளம் ராயப்பேட்டையிலோ, அடையாற்றிலோ, மாம்பலத்திலோ, கட்டப்படும் பங்களாக்களை விரும்ப

வில்லை. அது ஒரு காந்திஸ்தூபியைத்தான் விரும்பியது. காந்தி ஸ்தூபி கட்டப்பட்டிருக்கும் இதே இடத்திலே சோடாப் புட்டிகள் சூழ ஒரு காலத்தில் என். எஸ். கிருஷ்ணன் களைத்துப்போன உள்ளத்துடன் அமர்ந்திருக்கலாம். ஆயினும் அது பொது உள்ளமாகயிருந்ததால், காந்தி ஸ்தூபியின் உருவத்தில் இன்று எவ்வளவு கம்பீரமாக நிற்கிறது பார்த்தீர்களா?

எப்படி இருந்தவர், எப்படிப்பட்டவர்களுக்கு மத்தியில் இருந்தவர், எப்படியெல்லாம் கனவுகளைக் கண்டிருக்கிறார்? நினைக்க நினைக்கப் பெருமையாக இருக்கிறது; மெய்சிலிர்க்கிறது.

கேவலம் ஒரு அறுபது படங்களில் நடித்துவிட்டதற்காக விழாக் கொண்டாடுகிறார்கள். என். எஸ். கே. இப்படி நினைத்தால் தன் வாழ்வில் ஒவ்வொரு நாட்களிலும் விழா நடத்திக் கொண்டே இருந்திருக்கலாம். அந்த அளவுக்கு அவரிடம் அனைத்தும் அடங்கி இருந்தன. அப்படி இருந்தும் அவர் தனக்காக ஒரு விழாவைக் கொண்டாடியதே இல்லை. காந்திக்காக விழாக் கொண்டாடினார். அவருக்காக ஸ்தூபி கட்டினார். அவரைப் பாருங்கள், அவரைப் புகழுங்கள் என்றாரே தவிர என்னைப் பாருங்கள், என்னைப் புகழுங்கள் என்று சொன்னதில்லையே!

மரணப் படுக்கையிலும் கலைவாணன், கலைவாணனாகவே இருந்துதான் செத்திருக்கிறான்.

உயிர் பிரிவதற்குமுன் மயக்கம். மயக்கம்வரும் ஒரு மணி நேரத்துக்கு முன்னே அவர் ஒரு ஆசைப்பட்டிருக்கிறார். இப்படி ஒரு ஆசை எந்த ஒரு மனிதனுக்கும், எந்த ஒரு கலைஞனுக்கும், எந்த ஒரு பொதுநல வாதிக்கும் இதுவரையில் ஏற்பட்டதுண்டா? அதுவும் மரணப் படுக்கையில் வைத்து!

அது என்ன ஆசை?

பெருமையுடன் சொல்லுகிறேன்—பெருமையுடன் கேளுங்கள். அன்புக்குரிய கம்பெனி மேனேஜரை அருகில் கூப்பிட்டு

''கிருஷ்ணமூர்த்தி! இன்னிக்கு ராஜாஜி ஹாலில் சுத்தானந்த பாரதியாருக்குப் பொன்னுடை போர்த்துருங்களாம். பேப்பர்லே படிச்சேன். ஒரு வாழ்த்துக் கவிதை அனுப்பணும். உடனே சுப்பு ஆறுமுகத்தை ஆள் அனுப்பிக் கூப்பிடு'' என்று பேசமுடியாத நிலையிலும் திக்கித் திக்கிச் சொல்லியிருக்கிறார்.

இப்படியெல்லாம் எல்லோருக்கும் பொதுவாக வாழ்ந்து காட்டிய கலைவாணரைப்பற்றி சிலர் மேடையிலே பேசுவதையும் எழுதுவதையும் பார்க்கும்போது வருத்தத்துடன் சிரிப்பும் வருகிறது.

''கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனுடன் நான் 13 வயது முதல் பழகினேன். எவர் எப்படிப்பட்ட குற்றம் செய்தாலும் மன்னிப்பவர். எனக்கு சகோதரர் மாதிரி. அவரைப்பற்றி எனக்குதான் அதிகம் தெரியும்'' என்ற தினுசில் ஒரு நடிக சிகாமணி பேசுகிறார். ''அட பரிதாபமே, கலைவாணரிடம் ஒரு நிமிஷம் பழகியவர்கள்கூட அவரைப்பற்றி அதிகம் பேச முடியுமே!''

''அள்ளிக் கொடுப்பதில் அண்ணனுக்கு அடுத்த வாரிசு நான்தான் என்று இந்த திராவிடமே என்னை நோக்கி சொல்கிறது. அவர் ஆஸ்பத்திரியில் இருக்கும்போது ரூபாயெல்லாம் கொடுத்திருக்கிறேன். என்னை மட்டும் குடிக்காதே என்று சொன்னார். ஆகவேஅவர் இறந்ததால் இந்த நாட்டுக்கு நஷ்டம்'' என்ற தினுசில் பேசினார். ஒரு ''ஸ்டார் வேல்யூ''

அண்ணன் இவரை மட்டும் குடிக்காதே என்று சொன்னாராம். அதை மேடையில் சொல்லுகிறார். என்ன பெருந்தன்மை பாருங்கள்! காஷ்மீரத்தின் காட்டு அணிலையும் கன்னியாகுமரி கடற்கரை நண்டுகளையும்கூட ஒரே தினுசில் கருதும் உலகப் பெரியவன் அல்லவா என். எஸ். கிருஷ்ணன்!

''எனக்கு வீடுவாங்கித் தந்தார். இனம் நிலம்வாங்கித் தந்தார். அந்த நிலத்துக்குத் தண்ணீர் இறைக்க ஒரு மெஷினும்

வாங்கித் தந்தார். ஆகவே அவர் பிரிவு நாட்டுக்கே ஒரு நஷ்டம்'' என்கிறார் ஒரு அம்மையப்பன்.

இவருக்கு வீடு, நிலம் வாங்கிக் கொடுத்திராவிட்டால் இவர் வருத்தப்படவே மாட்டார் போலும்.

'' உன் காருக்கு எவ்வளவு பெட்ரோல் வேண்டுமோ அவ்வளவு பெட்ரோல் போட்டுக்கொள், இதோ கையெழுத்திட்ட பில் புத்தகம் என்று தந்தார். ஆகவே அவர் பிரிவு தென்னகத்துக்கு நஷ்டம்'' என்கிறார் ஒரு மேதாவி.

அட உலகமே! கலைவாணரை நினைக்கும்போது உனக்கு எப்படித்தான் பெட்ரோலின் நினைவும் வந்ததோ?

இப்படியே என். எஸ். கேயை தங்கள் பெயருக்குக் குத்தகை எடுத்துக் கொண்டது போலப் பேசுகிறார்கள் ஒரு சிலர். அவர் மீது அன்பிருக்கலாம். அதுவும் அதிகமாக இருக்கலாம். அதற்காக பெரிய கடலையே, ஆழாக்குப் படிகொண்டு அளக்க முயலுவது பேதமை.

காந்தியின் மீது தான்கொண்ட அன்பிற்காக நேரு இப்படி காந்தியைக் குத்தகைக்கு எடுத்தது இல்லை. பாரதியிடம் பாரதி தாசனுக்குப் பரிவுதான். அந்தப் பரிவை இந்த வழியிலெல்லாம் அவர் செலவாக்கிவிடவில்லை. தமிழிடம் பாரதி சொந்தம் கொண்டாடினான். அதற்காகத் தமிழை தனக்குத்தான் சொந்தம் என்று சொல்லிவிடவில்லை. தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகைசெய்தல் வேண்டும் என்றுதான இமயத்தில் நின்று பொதுவுடமை பேசினான். இந்தப் புனிதமான வரிசையில் நிற்பவர்களைப் பார்த்தாவது ஒரு சில என். எஸ். கே அன்பர்கள் ஒரு சில நாளுக்குள்ளே திருந்திவிட்டால், அது நாட்டுக்கே நலன் பயக்கும் ஒரு மாற்றம் ஆகும்.

கலைவாணரின் நினைவுக்காக யாரும் எதுவும் செய்யட்டும். தடுக்காதீர்கள். தாக்கி ஒரு வார்த்தைகூடப் பேசாதீர்கள்.

உண்மையான என். எஸ். கேயின் வாழ்வு 30-8-57 காலை 11-மணியிலிருந்துதான் துவங்கியிருக்கிறது. அது வளரட்டும், வாழட்டும்.

வான்முகட்டிலிருந்து பொங்கிப் புறப்பட்டு மலையைத் தொட்டுத் தழுவி எல்லோரும் குளியுங்கள் குளியுங்கள் என்று மேலே இருந்து ஆனந்த சுதந்திரமாக ஆடிப்பாடி குதித்து விழுந்து அழகுதரும் குற்றாலத்து நீரருவி! பொதுவுடமையை சொல்லாமல் சொல்லிக்கொண்டிருக்கும் பொருணையாறு. கண்டாலே வேட்கை நீக்கும் காவேரி. இவைகளின் நிலையில் இயங்கியவர் தான் கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன்.

இவைகளை யெல்லாம் பொதுமக்கள் அனுபவிப்பது போலத் தான் கலைவாணரை அனுபவிக்க வேண்டும். அவருக்கும் பொதுமக்களுக்கும் மத்தியில் எவரும் நந்தியாக வேண்டாம்.

அவரிடம் நெருங்கிப் பழகியவர்கள் அவரைப்பற்றிப் பேசும் போது தங்களிடம் அவர் பழகியிருக்கும் விதத்தையும் தாங்கள் அவரைப்பற்றிக் கொண்டிருக்கும் அபிப்பிராயத்தையும் கூட சொல்லக்கூடாது என்று நான் சொல்லவில்லை. சொல்லுங்கள்; நன்ருகச் சொல்லுங்கள். ஆனுல் அண்ணனுக்கு என் மேல்தான் ஸ்பெஷல் அன்பு என்று மட்டும் சொல்லாதீர்கள். அது அவரது புனிதமான பொதுவுள்ளத்தை வெட்டிக் கீறிக் காயப்படுத்தும் ஒரு சதி முயற்சிதான்.

அடுத்தாற்போல் இன்னெரு அபிப்பிராயமும் சொல்ல ஆசைப்படுகிறேன்.

கலைவாணருக்கு சிலை வைப்பது மிகவும் அவசியம்தான். அயல் நாட்டார் வரும்போது அவர்களிடம் கலைவாணரைப் பற்றிச் சொல்வதற்கு ஒரு வேளை அன்பர்கள் மறந்துவிட்டாலும் சிலையாவது இதோ இருக்கிறேன் என்று சொல்லிக்கொண்டிருக்கும். ஆகவே சிலை அவசியம்தான். பெரிய அளவில்

பல்லாண்டு காலம் இருக்கும் வண்ணம் உறுதியாகச் செய்து நடவேண்டியதும் அவசியம்தான்.

ஆனால் சிலை. செய்யப்பட்ட இடத்திலிருந்து, குறிப்பிட்ட இடத்திற்கு கொண்டு வருவதுபற்றி மட்டும் நான் நினைத்த ஒரு நேர்மையைச் சொல்ல விரும்புகிறேன். கண்ணகிக்குச் சிலைக் கல்லை கனக-விசயன் சுமந்து வந்ததைப் போல கலைவாணரின் சிலையைத் தூக்கிச் சுமக்கவேண்டிய ஒரு சில கனக-விசயன்களும் நம்மிடையே உலவுகிறார்கள். அவர்கள் தலையில் ஏற்றிக்கொண்டு வருவதைக் கலைவாணரின் மன்னிக்கும் உள்ளம் விரும்பாது என்பதை நானும் அறிவேன். எனினும் கனக-விசயர்கள் இருக்கிறார்கள் என்பதை நினைவூட்டவே இதை எழுதினேன்.

கடைசியாக ஒரு சில வார்த்தைகள்.

நம்மில் யாருக்கேனும் என்றேனும் பைத்தியம் பிடித்தால் கூட 'என். எஸ். கிருஷ்ணன் என்பவர் ஒரு காமிக் நடிகர்தான்' என்ற எண்ணம் மட்டும் நம்முன் வந்துவிடக்கூடாது என்ற உறுதிக்காக இன்றே இயற்கையிடம் அருள்வேண்டி நிற்போம். ஏனெனில் காலம் பொல்லாதது. உறுதிகளைக் கரைப்பது. தமிழ் அகராதியில் என். எஸ். கிருஷ்ணன் என்ற பெயருக்கு நேரே, 'ஒரு உலகப் பெரியார்' என்ற பொருளை இன்றே எழுதி வையுங்கள்.

என். எஸ். கிருஷ்ணன் எதற்கும் கட்டுப்படாதவர்; அதே நேரத்தில் எதற்கும் கட்டுப்பட்டவர்.

அவர் ஒரு தத்துவம்!

எந்த நாட்டிற்கும் எந்தக் காலத்திற்கும் தாம் ஒரு பொதுப் பொருளாக இருக்க வேண்டுமென்பது அவரது இதயத்தின் ஆழத்தில் இருந்த ஆசை. அந்த ஆசைக்குத் துளியளவேனும் யாரும் ஊறு செய்துவிட வேண்டாம். நம் நாட்டில் ஏற்கனவே இருக்கின்ற பாவங்கள் போதும்!

இன்னும் என். எஸ். கிருஷ்ணன் எங்கும் போய்விடவில்லை!

அவர் இருக்கிறார்!

அவரை நீங்கள் காணலாம்—பேசலாம்!

அவருக்கு நீங்கள் என்னென்ன செய்ய நினைக்கிறீர்களோ அத்தனை நல்ல காரியங்களையும் அங்கே போய்ச் செய்யலாம்.

என். எஸ். கேயின் இன்றைய முகவரி தருகிறேன்!

போய்ப் பாருங்கள்!

கண்ணீரால் எழுதுகிறேன்.

இதோ இதுதான் முகவரி,

''கலைவாணர்
என். எஸ். கிருஷ்ணன்
C/o ஏழைகள்
தமிழ் நாடு''

# கலைவாணர்—ஒரு அமரர்

[1]

கண்ணிழந்த பின்னொருவன் உலவு தற்கும்
கலைவாண ரின்றி, கலை உலவு தற்கும்
உண்மையிலே பேதமெதும் இல்லை என்பேன்;
உலகு மிதை ஒப்புமென உணரு கின்றேன்.
தண்ணீரில் வாழ்ந்திருந்த மீன்கள் போல,
தமிழரெலாம் கலைவாணர் அன்பில் வாழ்ந்தோம்;
தண்ணீரும் வற்றியதே; தரையில் வீழ்ந்தோம்;
தத்தளிக்கும் நிலையிதற்கு முடிவும் யாதோ?

[2]

காந்தியைப்போல், கள்ளமிலாப்பிள்ளையைப்போல்
கனிவான புன்முறுவல்! இனிக்கும் பேச்சு!
மாந்தர்களில் கோடிக்குள் ஒருவர் கொண்ட
மாசில்லா மதிவதனம்; உதய வானம்!
காந்தமென எவரையுமே கவர்ந்து கொள்ளும்
கவர்ச்சிமிகு மகிழ்ச்சிநிலை தேங்கும் கண்கள்!
சாந்தநடை; சமரசத்தின் தூதுவன் போல்
சரித்திரத்தில் சாயாமல் நிற்கும் காதை!

[3]

மெய்யோடு மெய்யாகத் தாய்சேய் மேவும்
மேன்மையுளப் பான்மையிலே, மேடைப் பேச்சு!
பையில்எதும் இருந்தாலும் கேட்டார்க் கெல்லாம்
பாராமல் ஈந்துதவும் மற்ருேர் பாரி!
வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து போன
வழுவில்லாக் கலைவாணர் அமரர்; அண்ணன்!
கையெடுத்துக் கடவுளுமே வணக்கம் சொல்வார்
கலைவாணர் கையெடுத்து வணங்கும் போதில்!

[4]

என்னெஸ் கி(ரு)ஷ் ணன்உடல்தான் இந்நாள் இல்லை;
இனிக்கின்ற அவர்நினைவு என்றும் உண்டு.
நன்மைகளுக்(கு) ஆயுள்எதோ அதுவே நம்மின்
நகையரசின் புகழுக்கும் ஆயு ளாகும்!
தன்னருமை—தனதுபுகழ்—தனது செல்வம்—
தனக்கின்றி பிறருக்கே தந்த அண்ணே!
இன்னுமன்ருே இருக்கின்ருேம், செத்தி டாமல்;
எங்களுக்கா நீயுதவி செய்ய வேண்டும்?

[5]

பள்ளிகளாய், ஸ்தூபிகளாய், மற்றும் ஆய்வுப்
படிப்பகமாய், சாலைகளாய், நீநிற் கின்ருய்!
வள்ளல்எலாம் இதுவரையில் மற்ற ஆளை
வாழத்தான் வைத்ததுண்டும்; ஆனுல் நீயோ
கள்ளரையும் கனிவாக்கி, திருத்தி, ஆண்டு,
கவலையிலா மனத்தினராய் புதுமை செய்து,
வள்ளலென அவர்களைத்தான் மாற்றி விட்டாய்;
வழங்குகிருர், ஆயிரங்கள் உனேத்தொ டர்ந்தே!

[6]

''தமிழர்களுக்(கு) இதயமெலாம் சுருங்கு தையோ
தமிழ்நாடு வாழுவதும் எவ்வா'' றென்றே
இமைமூடா திரவெல்லாம் விழித்தே, எண்ணி,
ஏக்கத்தால் தூக்கமின்றி இளைத்து விட்டாய்!
அமுதகுணக் கலையரசே, நின்னைக் கண்டார்,
ஆண்டவனைக் காணாத கவலை விட்டார்!!!
எமக்கென்ன இனி? நின்னோ(டு) எரிந்துநின்ற
ஏருசெய்த பாக்கியமும் செய்தோ மில்லை!

[7]

தென்னாட்டில் பாரதிக்குப் பிறகு வந்த
தீர்க்கதரி சனஞானம் பெற்றான் நீயே!
அன்னாரும் உனைப்போல்தான்; அவர்க்கு வைத்த
ஆகாரம் தனையும் பிறர்க்(கு) ஈந்துவாழ்ந்தார்!
உன்னளவில் தான்அவரும்; அரைநூற் றாண்டும்
உயிரின்றி மறைந்திட்டார்; இயற்கை தீதே!
என்னென்ன வகையிலெல்லாம் முழுமை கண்டீர்;
ஏனில்லை, ஆயுளிலும் முழுமை வெற்றி?

[8]

இருந்திடவேண் டியவரெல்லாம் இறக்கின்றீரே!
இறந்திடவேண் டியசிலபேர் இருக்கின்றாரே!
இருந்திடவா? இறந்திடவா? புரியவில்லை!
இந்நிலைமை நமக்கேனோ? தெரிய வில்லை!
இருந்திடவேண்டும் என்றால் ஒன்று செய்வோம்;
எல்லோரும் என்னெஸ்கே இதயம் கொள்வோம்!
சரிந்திட்ட தமிழ்ச்சரிதை நிமிர்ந்து வாழ
சன்மார்க்கம் இதுவன்றி எதுவு மில்லை!

[9]

தனக்கென்று வீடுநிலம் கார்கள் வாங்கும்
தைரியமில் கலைஞர்களே வாரீர்; கேளீர்!
தனக்கென்று வாழாத என்னெஸ் கேக்கு
தமிழ்நாடு தந்திட்ட மதிப்பைப் பாரீர்!
தனக்கென்றோர் மணிப்பர்சு; பெட்டிச்சாவி;
சாகும்வரை வைத்தறியா என்னெஸ்கிருஷ்ணன்,
தனக்கென்று, தன்னைப்போல் வாரீசெல்லாம்
தமிழ்நாட்டில் வேண்டும்எனத் தாகம் கொண்டார்!

[10]

''கலைவாணரிஸம்'' என்றோர் ஏடுதீட்டி
கலைவாணர் கொள்கைகளைப் பரப்பவாரீர்!
கலைவாணர் திருப்பெயரால், அறச்சாலைகள்;
கல்விநிதம் புதிதுதரும் பள்ளி; ஊர்கள்;
நிலையாகக் கலைக்கூடம் அமைப்பீர்; ஆங்கே
நெறிவளர்ப்பைக் குறியாக நினைவில் கொள்வீர்;
குலையாத கூட்டுறவாய் தமிழர்—மாந்தர்—
குதுகலமாய் வாழுவதே, அவர்க்குச் சாந்தி!

அமரர் கிருஷ்ணன் வாழ்க!

முற்றும்



